குடும்பத்துடன் களிக்க...

# கல்கி

KALKI 28.8.2005
ரூ.7.00
96 பக்கங்கள்



"என்னை
குழப்ப முடியாது!"



## கோடம்பாக்கத்துக் கோபங்கள்!



## சீரழியும் சினிமா டான்ஸர்கள்!

தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் தலைவராக மீண்டும் அறிவிக்கப்பட்ட ஜி.கே.வாசனைச் சந்தித்தோம்... ''என்ன சார்... யோசனைகள் எதுவும் கேட்க வந்தீங்களா...?'' என்று கல்கியில் 'காங்கிரஸ் உருப்பட பத்து யோசனைகள்' சொன்ன இளங்கோவனின் பேட்டி பற்றி நினைவூட்டி, பளீர் சிரிப்புடன் பேசினார்.



# "என்னைக் குழப்ப முடியாது!"

## - வாசன் அதிரடி

***நீங்கள் மத்திய அமைச்சராவீர்கள் என்று கூறப்பட்டது. தற்போது மீண்டும் தலைவராகவே நீடிப்பதால், உங்களுக்குப் பதிலாக தமிழக காங்கிரசைச் சார்ந்த வேறு யாருக்கேனும் பதவி கேட்கும் திட்டம் உண்டா...?***

காங்கிரஸ் கட்சி கடந்த முப்பத்தெட்டு ஆண்டுகளாக தமிழகத்திலே ஆட்சியில் இல்லை. தற்போது மத்தியிலே காங்கிரஸ் தலைமையில் ஆட்சி சிறப்பாக செயல்பட்டுக் கொண்டிருக்கும் நேரத்தில் தமிழக காங்கிரசைச் சேர்ந்த யாருக்கு அமைச்சரவையில் வாய்ப்புக் கொடுத்தாலும் அதன் மூலமாக கட்சி பலம் பெறும். இதுதான் அனைவருடைய எண்ணமும். முடிவு செய்ய வேண்டியது அன்னை சோனியாதான். அவருடைய முடிவுதான் எங்களுக்கும் இறுதி முடிவு.

***தமிழக முதல்வர் நாளொரு திட்டம்... பொழுதொரு சலுகை அளித்து வருவதால் கஜானாவே காலியாகிவிடும் என்கிறார்களே...?***

கஜானாவில் ஒன்றும் இருப்பது போன்றே தெரியவில்லை... நல்ல திட்டங்களை அறிவிப்பதை யாரும் குறை சொல்ல முடியாது. ஆனால் எப்

பொழுது வேண்டுமானாலும் தேர்தல் வரும் என்ற சூழ்நிலையில்தான் இதுபோன்ற அறிவிப்புகள் வெளியாகின்றன. இவையெல்லாம் நான்கு ஆண்டுகளுக்குள்ளேயே முறையாக வந்திருக்க வேண்டும். ஆனால் மக்களுடைய எண்ணத்தை பிரதிபலிக்காத ஆட்சியாளர்களாக அ.தி.மு.க. அரசு இருப்பதால், தற்போது இவ்வளவு தாமதமாக வெளியிடுகிறது... தேர்தல் என்று பார்த்தால் அ.தி.மு.க. பலவீனமாக உள்ளது. ஆகவே மக்களைத் திசை திருப்ப, விரும்பியோ, விரும்பாமலோ, ஒரு கட்டாயத்திற்காக இத்தகைய அறிவிப்புகளை வெளியிடுகிறது. ஆனால் அவை செயல்வடிவம் பெறுவது கேள்விக்குறிதான்.

**கூட்டணி குறித்து தாம் திறந்த மனத்துடன் இருப்பதாக ஜெயலலிதா கூறியிருப்பது எதை மனத்தில் வைத்து...?**

தமிழக மக்களுடைய பேராதரவைப் பெற்ற வெற்றிக் கூட்டணி ஜனநாயக முற்போக்குக் கூட்டணி. சென்ற நாடாளுமன்றத் தேர்தலைப் போன்றே, வரும் சட்டமன்ற தேர்தலிலும் எங்களையே மக்கள் ஆதரிப்பார்கள். இந்த விஷயத்தில் நாங்களும் சரி, பொதுமக்களும் சரி... மிகத் தெளிவாக இருக்கிறோம். யாரும் எங்களைக் குழப்ப முடியாது.

**அந்த அளவிற்குத் தெளிவாக இருக்கும் நீங்கள் எதற்காக உங்கள் கூட்டணியைப் பிளக்க உளவுத்துறை முயற்சிப்பதாகக் கூறினீர்கள்...?**

பலமாக இருப்பவர்களை பலவீனமாக உள்ளவர்கள் உடைக்க முயற்சிப்பது புதிதல்ல. ஆனால் அந்த முயற்சிகள் எல்லாம் தவிடுபொடியாக்கப்படும் என்று தான் கூறுகிறோம். இடையிலே புகுந்து எங்களைக் குழப்ப நினைப்பவர்கள் தாம் குழம்பப் போகிறார்களே தவிர, நாங்கள் குழம்பப் போவதில்லை... இது உறுதி.

**இளைஞரான நீங்கள் கட்சிக்குப் புத்துணர்வூட்ட நடைப் பயணமோ அல்லது மாவட்ட, மண்டல, மாநில மாநாடுகளையோ நடத்தி தொண்டர்களுக்கு சுறுசுறுப்பு ஏற்றவில்லை. காரணம் கட்சிக்குள் ஏற்படும் கோஷ்டிப் பூசலை சரிசெய்யவே நேரம் சரியாக உள்ளது என்கிறார்களே...?**

எந்தக் கட்சியில்தான் கோஷ்டிப் பூசல் இல்லை...? பா.ஜ.கவில் இருக்கிறது. சிவசேனையில் இருக்கிறது. ஜனதா தளத்தில் இருக்கிறது. அதேபோன்றுதான் காங்கிரசிலும்... ஆனால் அதை கோஷ்டி என்று சொல்ல மாட்டேன். மாறாக கருத்து வேறுபாடு என்று சொல்லலாம். அவையெல்லாம் விரைவில் களையப்பட்டு, வரும் 20ந் தேதி முதல் 550 பொதுக் கூட்டங்கள் தமிழகம் முழுக்க நடத்த உள்ளோம். இது முதல்படி. அடுத்தடுத்து பல திட்டங்கள் வகுக்கப்பட்டு, செயல்படுத்தப்படும்.



**சமீபத்தில் பேட்டியளித்த இளங்கோவன், "இந்த முறையாவது தமிழக காங்கிரசை வலுப்படுத்தும் வகையில் செயல்பாடுகள் இருக்க வேண்டும்" என்று கூறியுள்ளார். அப்படியானால் கடந்த முறையில் நீங்கள்...?**

(சட்டென்று உஷ்ணமடைந்து குறுக்கிடுகிறார்) நான் தனித்தனி வார்த்தைகளுக்கு எல்லாம் தவறாக அர்த்தம் புரிந்து கொள்ளும் தலைவன் அல்ல.



எனக்கு காங்கிரஸ் கட்சியின் நலன் தான் முக்கியம். இதுதான் மூத்த தலைவர்கள் அனைவரது ஒட்டுமொத்த எண்ணமாகவும் இருக்கும்.

***பொதுச் செயல் திட்டம் நிறைவேற்றுவதில் காங்கிரஸ் கட்சி தடுமாறுவதாக சி.பி.எம்மின் தமிழ் மாநிலச் செயலாளர் வரதராஜன் கூறியுள்ளார். இது தமிழகக் கூட்டணிக்குள் அடுத்த குழப்பமா?***

பொதுச் செயல் திட்டத்தை முழுமையாக நிறைவேற்ற வேண்டும் என்பதுதான் அனைவரது எண்ணமும். ஆகவே இந்த விஷயத்தில்

## “எந்தக் கட்சியில்தான் கோஷ்டிப் பூசல் இல்லை...?”

மத்திய அரசு தடம் புரளாது. தடுமாறவும் இல்லை. கருத்து வேறுபாடுகள் வராமல் தடுக்க கூட்டணிப் பிரதிநிதிகளைக் கொண்ட ஒரு குழுவை ஏற்படுத்தியுள்ளோம். எங்களைப் பொறுத்தவரை கருத்துகள் எல்லாம் கூட்டணியுடைய பலத்திற்குத்தான் என்று முழுமையாக எடுத்துக் கொள்கிறோம். ஒருவேளை கருத்து வேறுபாடுகள் வந்தாலும், அவை மக்கள் பிரச்னையை ஒட்டியே இருப்பதால் இது கூட்டணியை ஒன்றும் பாதிக்காது.

***போலி வாக்காளர் சேர்ப்புக்குத் துணை போன தமிழக அமைச்சர்கள் மீது கிரிமினல் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்றீர்கள். இதற்கு என்ன ஆதாரம் உள்ளது?***

இந்த போலி வாக்காளர்கள் சேர்ப்பில் அ.தி.மு.கவின் செயல்பாடு தவறான நிலையில் உள்ளது. முக்கியப் பொறுப்பில் உள்ளவர்கள் எல்லாம் அதிலே தங்களுடைய பங்கைக் காண்பித்துள்ளார்கள். இதில் நடந்த தவறுகள் குறித்து தேர்தல் ஆணையத்திற்கு முறைப்படி தெரிவித்துள்ளோம். ஆகவே இவர்கள் மீது ஆணையம் கண்டிப்பாக நடவடிக்கை எடுக்கும் என்று நம்புகிறோம்.

**- இரா. முத்துக்குமார்**

படங்கள்: **ராஜன்**


**கல்கி**

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : **கி. ராஜேந்திரன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

ஆசிரியர் குழு :
**அனுராதா சேகர்**
**ஆர்.சி. ஜெயந்தன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன்**
**பி.ஆர். ராஜன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623
2225 1324

தொலைநகல் :
044 - 2225 1021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.390/-
ஆறு மாதம் : ரூ.195/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 63.50 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2060/-

Bharathan Publications
Private Limited,
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

# சீரழியும் சினிமா

பாடல்கள் இல்லாமல் தமிழ் சினிமா இல்லை. நடனமும், நடனக் கலைஞர்களும் இல்லாமல் பாடல்கள் இல்லை. இதுதான் இன்றைக்கும் கோலிவுட்டின் உண்மை நிலவரம்.

இவ்வாறு தமிழ் சினிமாவின் இதயமாகச் செயல்பட்டுக் கொண்டிருக்கும் நடன இயக்குனர்களும், நடனக் கலைஞர்களும் சமீபகாலமாக ஏராளமான பிரச்சனைகளில் சிக்கித் தவிப்பதாக நமக்கு புதுத் தகவல் கிடைத்தது. டான்ஸர்ஸ் யூனியனில் வெளியே தெரியாத வண்ணம் ஏராளமான பிரச்சனைகளும் மோதல்களும் வெடித்து, பல டான்ஸர்கள் இந்தத் தொழிலை விட்டே போய்விட முடிவு செய்திருப்பதாகவும் தெரிய வர, நாம் உடனடியாக விசாரித்தோம்.



இந்திய அளவில் புகழ்பெற்ற தமிழ்த் திரையுலக டான்ஸ் மாஸ்டர்களும், டான்ஸர்களும் இப்பிரச்சனை குறித்து நம்மிடம் பேச முன் வந்தாலும், தங்களது பெயரையோ புகைப்படத்தையோ வெளியிட ஒருவரும் முன்வரவில்லை. "ஏற்கெனவே இடியாப்பச் சிக்கலில் மனநிம்மதியை இழந்த நாங்கள், இதன் மூலம் வயிற்றுப் பிழைப்புக்கும் சிக்கலை ஏற்படுத்திக் கொள்ள வேண்டாமே" என்று அச்சம் கலந்த வேண்டுகோள் விடுக்க, அவர்கள் உணர்வுகளுக்கு மதிப்பளித்து, அவர்களது குமுறல்களையும், குற்றச்சாட்டுகளையும் மட்டும் பதிவு செய்து கொண்டோம்:

தமிழ் சினிமா டான்ஸர்களின் திறமையும் மதிப்பும் ஊரறிந்த விஷயம். ஆனால் எங்களுக்கு ஒரு குறை என்றால் எங்கு சென்று முறையிடுவோமோ அதுவே இன்று எங்களை அல்லோலகல்லோலப் பட வைக்கிறது என்பதுதான் வேதனையான விஷயம். நூறு டான்ஸ் மாஸ்டர்களையும், ஆயிரக்கணக்கான ஆண்-பெண் டான்ஸர்களையும் உள்ளடக்கியதுதான் சினி டான்ஸர்ஸ் அசோசியேஷன். இதன் தலைவராக மாரி மற்றும் செயலாளராக பால நட்ராஜ் ஆகியோர் செயல்படுகின்றனர்.

கட்டப்பஞ்சாயத்து போல இவர்கள் வைத்ததுதான் சட்டம். அடிபணியாதவர்கள் மீது 25,000 ரூபாய் அபராதமும், மூன்று மாத இடைக்காலத் தடையும் தயவு தாட்

சண்யமில்லாமல் விதித்து விடுவார்கள்.

இயக்குனர்கள் எந்த மாதிரியான டான்ஸர்களைக் கேட்கிறார்களோ அவர்களைத் தான் ஒரு டான்ஸ் மாஸ்டர் தேர்ந்தெடுக்க முடியும். பொதுவாகவே டான்ஸர்கள் என்றால் அனைவருமே அடித்தட்டு மக்கள்தான். இப்படியிருக்கும்போது தாம்





# டான்ஸர்கள்!

சொல்லும் டான்ஸர்களைதான் டான்ஸ் மாஸ்டர்கள் உபயோகப்படுத்த வேண்டும் என்று மாரி வற்புறுத்துகிறார். இது நடைமுறைக்கு ஒவ்வாத விஷயம். ஆனால் இந்த கட்டளைக்குப் பணியாத டான்ஸ் மாஸ்டர் கல்யாணை திடீரென சஸ்பெண்ட் செய்தனர். அவர் இப்பிரச்னையை புரொடியூசர்ஸ் கவுன்சிலுக்கு எடுத்துச் செல்லவே, ஒரு மன்னிப்புக் கடிதத்தோடு இவ்விஷயம் தற்காலிகமாக சுமுகமானது. முன்னணியில் இருக்கும் கல்யாணுக்கே இந்நிலைமை என்றால், மற்றவர்களின் கதி என்னவாகும்?

2004ம் ஆண்டு ஜனவரி மாதம் 'ஜெயா' டீவிக்காக நடனக் கலைஞர்கள் சார்பில் 'ஸ்டெப் ஷோ' என்ற கலை நிகழ்ச்சி ஒன்று நடந்தது. இது திரையுலகுக்கான இலவச நிகழ்ச்சி. இதற்கென ஜெயா டீவி ஒரு கோடியே பத்து லட்சம் கொடுத்தது.



ஆனால் விதியை மீறி போலியாக டிக்கெட்டுகள் அச்சடித்து விலைக்கு விற்றுள்ளனர். இந்த அநியாயத்தைத் தட்டிக் கேட்டால் அபராதம் விதித்து விடுவோம் என்று மிரட்டுகின்றனர்.

இரண்டு பெண் டான்ஸர்களை, செயலாளர் பால நட்ராஜ் பாலியல் பலாத்காரத்துக்கு உட்படுத்த முயற்சி செய்துள்ளார். பாதிக்கப்பட்ட இருவருமே தைரியமாக சங்கத்தில் புகார் தெரிவித்ததும், 'சாட்சி இல்லை' என்று கூறி பிரச்னையை கைகழுவி விட்டனர். காவல் நிலையத்தில் புகார் ஏதும் கொடுத்தால், உறுப்பினர் கார்டையே ரத்து செய்து விடுவோம் என்றும் அவர்கள் மிரட்டப்பட்டுள்ளனர். இப்படி வேலியே பயிரை மேய்ந்தால் குறைகளை எந்த மன்றத்தில் முன்வைப்பது?

எதிர்கால பயத்திலிருக்கும் டான்ஸர்களைத் தூண்டிவிட்டு, அவர்கள் தெய்வமாக மதிக்கும் டான்ஸ் மாஸ்டர்களுக்கு எதிராகவே திருப்பி விடுகின்றனர். "என்ன இருந்தாலும் சங்கம்தான் உங்களுக்கு உறுதுணையாக இருக்கும்" என்று கூறிக் கொண்டே, மறுபக்கம் சொல்பேச்சு கேட்காதவர்கள் மீது அபராதமும் விதிக்கின்றனர். இதனால் பல அப்பாவி டான்ஸர்கள் தற்கொலைக்கும் முயற்சித்துள்ளனர்.



• மாரி



• பால நட்ராஜ்

மாரி இரண்டாம் முறை தேர்ந்தெடுக்கப்பட்டது பலருக்கும் புதிராக இருக்கிறது. தேர்தல் முறையாக நடந்ததா என்கிற சந்தேகம் எழுகிறது. சரி, அனைவரும் ஒற்றுமையாக கைகோத்து பதவியை விட்டுத் தூக்கலாம் என்றால், டான்ஸ் மாஸ்டர்களுக்குள்ளேயே ஈகோ பிரச்னைகள். இதற்கெல்லாம் ஒரே தீர்வு, டான்ஸ் மாஸ்டர் ஒருவர் தலைவராக வருவதுதான். இருந்தாலும் 'கல்கி'யில் எங்கள் ஆதங்கத்தை வெளிப்படுத்திய பிறகாவது, தலைவரும் செயலாளரும் எங்களைப் பாசத்தோடு அரவணைத்துச் செல்வார்கள் என்கிற கடைசித் துளி நம்பிக்கையோடுதான் அனைவரும் இருக்கிறோம்'' என்றனர் நாம் சந்தித்த நடனக் கலைஞர்கள் அனைவரும்.

இந்தக் குற்றச்சாட்டுகளுக்குச் சங்கத்தின் தலைவர் மாரியும், செயலாளர் பால நட்ராஜும் என்ன சொல்கிறார்கள்? முதலில் தம்மீதான பாலியல் குற்றச்சாட்டு எவ்வித அடிப்படை ஆதாரமும் இல்லாதது ஒன்று என மறுத்து விட்டுப் பேச ஆரம்பித்தார் பால நட்ராஜ்.

''எனக்கு ஐம்பது வயதாகிறது. சங்கம், சங்க உறுப்பினர்களின் நலன், இதை விட்டால் வேறு எதுவும் தெரியாது. 'ஸ்டெப் ஷோ' நிகழ்ச்சிக்காக இரவு பகலாக உழைத்ததில் மன உளைச்சல் ஏற்பட்டு, நிகழ்ச்சி நேரத்தில் எனக்கு முதல் மாரடைப்பு ஏற்பட்டது. அடுத்த சில தினங்களிலேயே இரண்டாவது அட்டாக். இதற்குச் சிகிச்சை எடுத்து வீட்டில் ஓய்வு எடுத்துக் கொண்டிருந்த போதுதான், என்மீது பாலியல் குற்றச்சாட்டு சுமத்தப்பட்டது. உடனே தார்மிக அடிப்படையில் பதவியை ராஜினாமா செய்தேன். அடுத்து வந்த இரண்டு மாதங்களில் தாய்ச்சங்கமான பெப்சி, முறைப்படி தேர்தல் அதிகாரியை நியமித்து தேர்தலை நடத்தியது. அதில் நூற்று இருபது வாக்குகள் வித்தியாசத்தில் என்னை மீண்டும் வெற்றி பெற வைத்தார்கள். அடுத்த கட்டமாக இருபத்தியொரு பேர் கொண்ட நிர்வாகக் குழு கூடி, பாலியல் குற்றம் சுமத்திய உறுப்பினரை அழைத்து விவரம் கேட்டது. அப்போது அவர் சொன்ன குற்றச்சாட்டு அவதூறானது, ஆதாரமற்றது என்பதை அவரே ஒப்புக் கொண்டார். நான் குற்றவாளி என்றால், இத்தனை மெஜாரிட்டியோடு மீண்டும் பொறுப்பைக் கொடுப்பார்களா?'' என்று கேட்கிறார் பால நட்ராஜ்.

எஞ்சிய குற்றச்சாட்டுகளுக்கு சங்

கத்தின் தலைவர் மாரி பதில் கூறினார்: " 'ஸ்டேஜ் ஷோ' நிகழ்ச்சிக்கான டிக்கெட்டுகளை ஓர் உறுப்பினர் காசுக்கு விற்றார் என்பது ஆதாரமில்லாத குற்றச்சாட்டு. குற்றம் சாட்டப்பட்டவரைக் கூப்பிட்டு விசாரித்தபோது, சங்கம் சார்பில் விநியோகிக்கப்பட்ட இலவச அனுமதிச் சீட்டுகளைத்தான் சக உறுப்பினர்கள் சிலருக்குக் கொடுத்தேன். அது எப்படி குற்றமாகும் என்று விளக்கம் அளித்தார். குற்றம் சாட்டுபவர்கள் போதிய ஆதாரத்தைச் சங்கத்தில் காட்டட்டும்.

''இன்று நிறைய டான்ஸர்களுக்கு வேலை இல்லை. பாடல் காட்சிகளுக்குப் பதினைந்து டான்சர்களைப் பயன்படுத்தினால், அதில் சங்கம் பரிந்துரைக்கும் ஒரு உறுப்பினருக்கு வாய்ப்புக் கொடுக்க வேண்டும் என்று ஒருமனதாகத் தீர்மானம் நிறைவேற்றி, அதைச் செயல்படுத்தி வருகிறோம். இவ்விதியைச் சில மாஸ்டர்கள் காற்றில் பறக்க விடுகிறார்கள். குறிப்பாக கல்யாண் மாஸ்டர், தொடர்ந்து இந்த விதியை மீறி வருகிறார். பலமுறை எச்சரிக்கைக் கடிதங்கள் அனுப்பியும் பொருட்படுத்த மறுத்து வருகிறார்.

இருபத்தியொருபேர் கொண்ட குழு எடுக்கும் முடிவுகள் குரல் வாக்கு மூலம் முடிவு செய்யப்படுகின்றன. ஒவ்வொரு பொதுக் குழுவையும் வீடியோ எடுக்கிறோம். டான்ஸர்களுக்கும் மாஸ்டர்களுக்கும் பூசலை ஏற்படுத்துகிறோம் என்கிற குற்றச்சாட்டு, வினோதமானது. செயற்குழுவில் ஏழு முன்னணி மாஸ்டர்கள் இடம் பெற்றிருக்கின்றார்கள். இது எப்படி சாத்தியம்? இந்த குற்றச்சாட்டுகளையெல்லாம் கேட்கிறபோது, இனியும் பதவியில் நீடிக்க வேண்டுமா என்று நினைக்க வைத்து விட்டார்கள்" என்றார் மாரி கவலையோடு.

இந்த எல்லாப் பிரச்னைகளும் நீங்கி, டான்ஸர்கள் சங்கம் ஒற்றுமையுடன் இயங்க வேண்டும்; ஒரு குடும்பம் போல சுமுகமாக செயல்பட வேண்டிய சங்கம் ஒரு சிலரது சுயநலத்தால் சீரழிந்து விடக் கூடாது என்பதே பல்வேறு தரப்பினரின் வேண்டுகோளாக உள்ளது.

**- நமது நிருபர்கள்**

**படங்கள்: யாணன்**

அட்டையில் : 'அந்நியன்' பட ஸ்டில்

# கவலையைத்



• கஸ்தூரி

**கர்நாடகாவில் பெரும் மழை கொட்டித் தீர்த்ததில், உபரித் தண்ணீர், மேட்டூர் அணையில் வந்து நிரம்பியுள்ளது. மேட்டூர் அணையின் நீர்மட்டம், காவிரிப் பாசன விவசாயிகளின் வயிற்றில் பால் வார்த்துள்ளதா? சுதந்திர தின உரையில் தமிழக முதல்வர் விவசாயிகளுக்கு வழங்கியுள்ள சலுகைகள் பற்றி, காவிரிப் பாசன விவசாயிகள் என்ன நினைக்கிறார்கள்?**

**அந்தோணிசாமி (65), அணைக்காடு கிராம விவசாயி (தஞ்சை மாவட்டம்):**

"தலைக்கு மேலே வெள்ளம் போய்க் கிட்டிருக்கு. இந்த நேரத்துல நம்ப முதல்வர் அம்மா 'உழவர் பாதுகாப்புத் திட்டம்' அப்படிங்கற மணல் கயிறை வீசி, எல்லாரும் அதனைப் பத்திரமா பிடிச்சிட்டுக் கரை யேறி வந்துடுங்கன்னு சொல் றாங்க. அவங்க விவசாயி களுக்குன்னு அறிவிச்சது எல்லாமே கேக்க நல்லாத் தான் இருக்குது. 'ஆனால், அத்தனையையும் செயல் படுத்த வேணுமே. விவசாயி களுக்கு இலவச மின்சாரத்தை ரத்து பண்ணினதே இந்த அம்மாதான். இப்ப பம்ப் செட்டு வெச்சிருக்கிற ஒவ்வொரு விவசாயியும் ஆறு மாசத்துக்கு ஒரு தபா மோட்டார் கரண்டுக்குப் பணம் கட்டிட்டு வர்றான். பம்ப் செட்டு இல்லாத விவசாயி, பக்கத்து வயல்காரன்கிட்ட பணம் குடுத்து, தண்ணி வாங்கி சாகு படி பண்ண முடியுமா? அதான் பார்த்தேன். ஒரு ஏக்கர் வயலை வித்துப்போட்டு போர் தோண்டி மோட்டார் பம்ப் செட் போட்டுட் டேன். வேற என்னங்க செய்றது? சுதந்திரதினத்தன்னிக்கி இந்தம்மா பேசுனது சும்மா தேன் மாதிரி காதுல பாய்ஞ்சுது. செயல்படப் போவும் போதுதான் அது தேனா, இல்லே தேளான்னு தெரிய வருமுங்க!"



• அருணாசலம்

## "தாற்காலிகப் பலன்தான்!"

**மா**ர்க்சிஸ்ட் கட்சியின் மாநிலச் செயலாளர் என்.வரதராஜன் இப்பிரச்னை குறித்து நம்மிடம் பேசும்போது...

"மாநிலங்களுக்கிடையே நதி நீர் ஒப்பந்தங்களில் தண்ணீரைப் பகிர்ந்து கொள்வது எப்படியோ, அதே போல் மழை இல்லாவிட்டால் பற்றாக்குறை யையும் பகிர்ந்து கொள்ள வலியுறுத்த வேண்டும். நூறாண்டுகளில், கடந்த நான்கு வருடங்களாக விவசாயிகள், விவசாயத் தொழிலாளர்கள் கடும் பாதிப்பைச் சந்தித்துள்ளார்கள். பல குடும்பங்கள் வெளி மாநிலங்களுக்குக்



• என். வரதராஜன்

# தீர்க்குமா காவிரி?





அருணாசலம் (61), தாமரங்கோட்டை கிராம விவசாயி (தஞ்சை மாவட்டம்):

''விவசாயி விபத்துல இறந்தா ஒரு லட்சம், இயற்கையா செத்தா பத்தாயிரம். அறுபது வயசுக்கு மேலே வேலை செய்ய முடியாத நிலையில் இருந்தா, மாத ஓய்வூதியம் இருநூறு ரூபா. ஒரு விவசாயி குடும்பத்துல புள்ளை பொறக்கறது லேருந்து, அந்த விவசாயி சாகுற வரைக்கும் வரிசையா வரப் போகுது அரசு உதவி. நாலு வருசமா இந்த அம்மாவுக்கு, இந்த விவசாயிகள் மேலே இல்லாத கரிசனம் இப்ப எதுக்கு வந்திருக்குன்னு தெரியலே. இதெல்லாம் விவசாயிகளுக்கு வந்து சேரும்னு நெனைக்கிறீங்களா? வருசா வருசம் கர்நாடகாவுலேருந்து காவிரித் தண்ணியைப்


அந்தோணிசாமி


• சி. பக்கிரிசாமி

கூலி வேலை தேடி ஓடியுள்ளன. குறுவை சாகுபடி செய்ய ஜூன் மாதம் தண்ணீர் வரவேண்டும். ஆகஸ்ட்டில்தான் தண்ணீர் வந்துள்ளது. சம்பா பயிர்தான் சாகுபடி செய்ய முடியும். கடந்த காலங்களில் விவசாயிகளுக்கு ஏற்பட்ட இழப்பால், பெரும் கடனாளிகளாக உள்ளார்கள்.

அவர்கள் விவசாயப் பணியைத் துவங்க, அரசு உடனடியாக பயிர்க் கடன் வழங்க வேண்டும். சிறு, குறு விவசாயிகளின் கடனை ரத்து செய்தோ, தவணை முறையில் கட்ட வாய்ப்புத் தந்தோ... புதுக் கடனுக்கு வழி செய்ய வேண்டும். கிராம வேளாண் கூட்டுறவு வங்கிகள் பெரும்பாலும் கடன் வழங்கும் தகுதியை இழந்து விட்டன. அரசுடைமை வங்கிகள் கடன் வழங்க முன் வருவதில்லை. இதனால் விவசாயிகள் கந்து வட்டிச் சுரண்டலில் சிக்கிச் சீரழிந்து வருகிறார்கள்.

தேர்தலை மனதில் வைத்து தமிழக முதல்வர், சுதந்திர தினத்தன்று உழவர் பாதுகாப்புத் திட்டம் ஒன்றை அறிவித்துள்ளார். இது விவசாயிகளுக்குத் தாற்காலிகப் பலன்தான். தமிழகத்தில் இருபது லட்சம் ஏக்கர் உபரி நிலம் இருக்கிறது. நில உச்ச வரம்புச் சட்டத்தில் உள்ள ஓட்டைகளை அடைத்து, புதிய சட்டத்தின் மூலம் நிலமற்ற ஏழை விவசாயிகளுக்கு அவற்றைப் பிரித்துத் தருவதே சிறப்பான செயலாகும்.''

- யாணன்

பெற்றுத் தந்து, கல்லணையிலேந்து கடை மடை வரைக்கும் நறுவிசா தூர் வாரி, விவசாயிகளுக்குத் தரமான விதைகள் தந்து, வங்கிகள்ல தாராளக் கடனுதவி தர்றதுதான் உண்மையான உழவர் பாதுகாப்புத் திட்டம்!''

**கஸ்தூரி (50), குத்தகை விவசாயி (சுந்தரநாயகிபுரம் கிராமம்)**

''இதெல்லாம் விவசாயிகளையும், விவசாயக் கூலிகளையும் கவர்ந்திழுக்கிற வெறும் பேப்பர் அறிவுப்புங்க. விவசாயி மகன் மற்றும் மகள்களுக்கு பத்தாம் வகுப்பிலிருந்து கல்வி உதவித் தொகைகள்னு நம்ப முதல்வர் அறிவிச்சுருக்காங்க. விவசாயிகள்ல பிற்படுத்தப்பட்ட, மிகவும் பிற்படுத்தப்பட்ட, அதிலும் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர்கள் தான் அதிகமா இருக்காங்க. இப்ப அவங்களுக்கும் இந்த கல்வி உதவித் தொகை பொருந்தி வருமான்னு தெரியலை. ஏன்னா, அவங்க எல்லாருமே சாதி அடிப்படையிலே ஏற்கெனவே கல்வி உதவித் தொகை வாங்கிட்டு வர்றாங்க. இது பத்தி எந்த விவரமும் தெளிவா இல்லீங்க. விவசாயப் பெண்களின் பிரசவத்தின்போது இரண்டாயிரம் ரூபாய் உதவித் தொகை வழங்கப் படும்னு சொல்லியிருக்காங்க. அரசாங்க மருத்துவமனையில காசு பணம் வாங்காம பிரசவம் பார்த்து அனுப்பிச்சாலே போதுங்க. இந்தம்மா பாட்டுக்கு இரண்டாயிரம் தர்றேன்னு சொல்லிட்டாங்க. தந்துட்டா அரசு ஆசுபத்திரியில என்ன செய்வாங்க? 'அந்த இரண்டாயிரத்துலெ இங்கிட்டு ஒரு ஆயிரம் ரூபா வெட்டுன்னு உரிமையாவே புடுங்க ஆரம்பிச்சுடுவாங்க. எல்லாம் கேட்டுக்க, நல்லா சிரிப்புதாங்க வருது!''

**சி. பக்கிரிசாமி (இந்திய கம்யூ.) தஞ்சை மாவட்ட ஊராட்சி உறுப்பினர்**

''ஒரு கோடியே இருபது லட்சம் குறு விவசாயிகள் மற்றும் விவசாயத் தொழிலாளர்கள் அனைவருமே வியந்து போகுமளவுக்கு அறிவிப்புகள் செய்திருக்கிறார் தமிழக முதல்வர் ஜெயலலிதா. ஆனால், அதன் திட்டங்களை எந்த அமைப்பு, எந்த அலுவலகம் வாயிலாக செயல்படுத்தும் என்பதைத் தெரிவிக்கவே இல்லை. 1998ல் கோலப்பன் குழுவினரால் பரிந்துரைக்கப்பட்ட நாற்பத்தி மூன்று அம்சங்களை நடைமுறைப் படுத்தினாலே போதும். அவற்றில் ஒன்பது அம்சங்கள், சிறு - குறு விவசாயிகள் நலன் சார்ந்தும், முப்பத்தி நான்கு அம்சங்கள், விவசாயத் தொழிலாளர்கள் நலன் சார்ந்தும் அமைந்துள்ளன. அதற்கு மாறாக, முதல்வர் ஜெயலலிதா தற்போது அறிவித்திருக்கும் 'உழவர் பாதுகாப்புத் திட்டம்' என்பது வெறும் கண் துடைப்பு அறிவிப்பாகவே ஆகிவிடும். காரணம், இவை எல்லாம் அவர்கள் செயல்படுத்தத் தொடங்குவதற்குள், சட்டமன்றத் தேர்தல் அறிவிப்பு வந்து விடும். அப்போது, வோட்டு வாங்க மட்டுமே அந்த அறிவிப்புகள் பயன்படுமே தவிர, விவசாயிகளுக்கோ, விவசாயத் தொழிலாளர்களுக்கோ, ஏர்முனையளவும் நன்மை கிடைக்கப் போவதில்லை என்பதே உண்மை!''

பேட்டி, படங்கள்:
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**



''எத்து வயதில்லை!''

''அவர் போலி டாக்டர்னு சொல்றியே, எப்படி?''

''காதுல ரயில் ஓடற மாதிரி சத்தம் கேட்குதுன்னு சொன்னா, 'எக்ஸ்பிரஸ்ஸா, பாசஞ்சரா'ன்னு கேட்கிறாரே...''

- க.வெங்கடேசன்





''அந்த ஓட்டல் முதலாளியோட ரவுசு தாங்கலை''

''என்ன பண்றாரு?''

''அவர் ஓட்டல்ல இருந்து வெளி வர்ற பேப்பர் தோசைக்கு லைப்ரரி ஆர்டர் வேணுமாம்.''

- நா. கோகிலன்

''ஸ்வாமி... மெகா சீரியல் தயாரித்துக் கொண்டிருக்கிறேன். என்னை வாழ்த்துங்களேன்...''

''உன்னை வாழ்த்த எனக்கு வயசில்லை... வணங்குகிறேன்!''

- எம்.அசோக்ராஜா





''பீஸ் குடுக்கறப்ப கண்ணை மூடிக்கச் சொல்றீங்களே... எதுக்கு டாக்டர்?''

''பணத்தைப் பார்த்து நீங்க திருஷ்டி போட்றக் கூடாது பாருங்க!''

- அம்பை தேவா

# சாதனைச் சேலை!



இந்திய அரசிடமிருந்து இரண்டு விருதுகளையும், ஐ.எஸ்.ஓ 9001 சர்வதேசத் தரச் சான்றையும் பெற்றுள்ள போத்தீஸ் சில்க்ஸ், அடுத்தகட்டமாக, உலகிலேயே மிக நீளமான புடைவையை 1276 அடிக்கு தயாரித்து கின்னஸில் இடம் பிடித்துள்ளது.

இந்த சாதனைச் சேலையின் சிறப்பம்சம் அதன் நீள, அகலத்தோடு முடிந்துவிடவில்லை. அதுபற்றி மேலும் ரத்தினச் சுருக்கமாகச் சொன்னார் போத்தீஸ் உரிமையாளர் ரமேஷ். "ஸ்ரீவில்லிபுத்தூரில் 90 ஆண்டுகளுக்கு முன்பு ஆரம்பிக்கப்பட்ட போத்தீஸ், இன்று சன் டீவி - ஏ.சி நில்சன் கருத்துக் கணிப்பின்படி சென்னையின் மிகப் பிரபலமான ஜவுளி மாளிகையாக விளங்குகிறது.

"நம் பாரம்பரியத்தை நினைவு கூறும் வகையில் 3 மாஸ்டர் நெசவாளர்கள், 6 நெசவாளர்கள், 9 ஓவியர்களின் கை வண்ணத்தில் மொகஞ்சோதாரோ - ஹரப்பா காலத்திலிருந்து, சுதந்திரப் போராட்டம் வரையிலான வரலாற்றை கண்முன் நிறுத்தும் படங்கள் இந்தப் பட்டுப்புடைவையில் உள்ளன. நெருக்கமான தங்க ஜரிகையால் ஆன இந்தப் புடைவையில் பாராளுமன்றக் கட்டடம், தாஜ் மஹால், சார்மினார், குதுப் மினார் போன்ற ஏராளமான நினைவுச் சின்னங்கள் இதில் பொறிக்கப்பட்டுள்ளன. தேசிய கைத்தறி வரலாற்றில் இச்சாதனை ஒரு முக்கியமான நிகழ்வாகும். கவர்னர் பர்னாலா இந்த சாதனைப் புடைவையை அறிமுகம் செய்தது எங்கள் பாக்கியம்" என்றார் மகிழ்ச்சிப் பூரிப்போடு.

தி.நகரிலுள்ள வடக்கு உஸ்மான் சாலை கின்னஸ் சாதனைகள் அரங்கேறும் இடமாக மாறி வருகிறது. அடுத்த கின்னஸ் என்னவோ? யார் நிகழ்த்தப் போகிறார்களோ?

- நீலாவள்ளி




## கதிர்காமருக்கு நேர்ந்த கொடூரம்!

இலங்கையின் வன்முறை வரலாறு மற்றும் ஒரு சிறந்த தலைவரை பலி கொண்டிருக்கிறது. 'லக்ஷ்மண் கதிர்காமர் மரணத்துக்குத் தாங்கள் பொறுப்பில்லை' என்று விடுதலைப் புலிகள் கூறுவதை இலங்கை அரசு நம்புவதற்குத் தயாரா யில்லை.

கதிர்காமரின் மரணம் பேரிழப்பே என்றபோதிலும், இத்தகைய பயங்கரங்கள் புதிதல்ல என்று கூறும் அளவுக்கு, இலங்கையில் நிச்சயமற்ற சூழல் பல்லாண்டுகளாக நிலவி வருகிறது. புலிகள் பேச்சுவார்த்தைக்கு ஒப்புக் கொண்டு, தற்காலிக அமைதி ஒப்பந்தம் செய்து கொள்வதும், அதைப் பயன்படுத்திக் கொண்டு, ராணுவ ரீதியாகவும் அரசியல் ரீதி யாகவும் தங்களை பலப்படுத்திக் கொள்வதும், பிறகு எதிர் பாராத நேரத்தில் இவ்வாறு தாக்கி தலைவர்களைக் கொல் வதும் வழக்கமாகவே ஆகிவிட்டது.

கதிர்காமர் விஷயத்தில் புலிகள் மிகுந்த வெறுப்புக் கொள்ள நிறையவே காரணம் உண்டு. தமிழராக இருந்த போதிலும் கதிர்காமர் தம்மை ஸ்ரீலங்கா பிரஜை என்றே கருதி, தேசிய உணர்வு மிக்கவராக விளங்கினார்.

சர்வதேச அளவில், விடுதலை இயக்கமாக அறியப்பட்டு, அங்கீகரிக்கவும்பட்டு, பல தரப்புகளிலிருந்து பொருளுதவி




கல்கி



2005 ஆகஸ்ட் 28
பார்த்திப ஆவணி 12
மலர் : 64
இதழ் : 4




பெற்று வந்தது விடுதலைப்புலிகள் அமைப்பு. அதனை ஒரு வன்முறை இயக்கமாக இனம் காட்டி, தடை செய்யப்படவேண்டிய பயங் கரவாத அமைப்பாக அடையாளப் படுத்தி, பல உலக நாடுகளின் உதவியும் ஆதரவும் ரத்தாவதற்குக் காரணமாக இருந்தவர் கதிர்காமர்தான். இலங்கை அயலுறவுத்துறை அமைச்சர் என்கிற பொறுப்பில், இந்தப் பணியை அவர் மிகுந்த தீவிரத்துடன் ஆற்றினார். பயங்கரவாத அமைப்பு என்ற முத்திரை விழுந்ததும் புலிகளுக்குப் பொருளுதவி செய்வதை பல நாடுகள், அரசுகள் நிறுத்தின. தங்கள் நாட்டு மக்கள், விடுதலைப் புலிகளுக்கு உதவுவதையும் தடைசெய்தன.

இதன் காரணமாகவே விடுதலைப் புலிகள், கதிர்காமரை பரமவிரோதியாகக் கருதுவதற்கு இடம் உண்டு.

தவிர, கதிர்காமர் பேரில் சிங்கள வெறியர் அமைப்புகளுக்கும் வெறுப்பு இருந்திருக்க லாம். புலிகளைப் போலவே அமைதியை மதியாத இவ்வமைப்புகள், கதிர்காமரைப் போன்ற ஒருவரது மரணம், அமைதிப் பேச்சுவார்த்தைகளை முடக்கிப்போடும் என்ற கருத்தில் செயல்பட்டிருக்கக் கூடும். பலர் கைதானாலும், இன்றளவும் கதிர்காமரைக் கொன்றது யார் என்பது மர்மமாகவே உள்ளது.

எவ்வாறாயினும், கதிர்காமர் கொலை மிகத் துல்லியமாகத் திட்டமிட்டு நிகழ்த் தப்பட்டிருக்கிறது. அவருடைய அன்றாடப் பழக்க வழக்கங்களை உன்னிப்பாகக் கவனித் துத் தெரிந்து வைத்துக் கொண்டு, அவர் பெரிதும் நம்பிக்கை வைத்திருந்த பக்கத்து வீட்டுக்காரரின் வீட்டுக்குள் நுழைந்து, பல பேர் கண்களில் மண் தூவி, தூரத்திலிருந்தே சுட்டு வீழ்த்தியிருக்கிறான் கொலையாளி! உணர்ச்சி வேகத்தில் செய்த கொலை அல்ல இது; முன் கூட்டியே திட்டமிட்டுச் செய்த படுபாதகம்.

"ஒரு மாவீரரை இழந்துள்ளது இலங்கை" என்று கூறியுள்ள சந்திரிகா குமாரதுங்கா, இனி அமைதிப் பேச்சுவார்த்தையை எவ்வாறு நெறிப்படுத்தப் போகிறார் என்பதுதான்




மிகப்பெரிய சவால்.

இலங்கையின் வடகிழக்கில் மட்டுமின்றி, உலகெங்கிலும் இலங்கைத் தமிழர்கள் உள்ள நாடுகளில் எல்லாம் புலிகள் தங்கள் வலைப் பின்னலைப் பரவச் செய்துள் ளார்கள். இலங்கையில் நேரடியாகவும், பிற நாடுகளில் தமிழர் அமைப்புகள், சங்கங் களுக்கு நன்கொடை என்கிற பெயரில் மறைமுகமாகவும், தங்கள் 'ஆட்சி'யை நடத்த வரி வசூல் செய்து வருகிறார்கள். இலங்கை அரசால் இது குறித்து ஒன்றுமே செய்ய முடியவில்லை.

அமைதிப் பேச்சுவார்த்தைகள் இக்கொலையால் சாட்டையடிபட்டு ஸ்தம்பித்துப் போய்விட சந்திரிகா குமாரதுங்கா அனுமதிக்கக் கூடாது.

பயங்கரவாதத்தை அரசு அமைப்புகள் ஜெயிப்பது துர்லபம். ஒரேயடியாக அவற்றை அழித்துவிடுவது சாத்தியமில்லை. அமைதியைப் பெற, நாட்டின் கௌரவத்துக்கு இழுக்கின்றி எவ்வளவு தூரம் வளைந்து கொடுக்கலாம் என்பதையே சந்திரிகா இனி சிந்தித்தாக வேண்டும். இன்னும் பல உயிர்கள் பலியாவதற்கு முன் இதைச் செய்தாக வேண்டும். கௌரவம் பார்ப்பதைக் காட்டிலும், மக்களின் கண்ணீர் துடைத்து அச்சம் போக்குவதுதான் முக்கியம்.

தமிழகத் தலைவர்களோ, புலிகளுக்கு ஆதரவு தெரிவித்துப் பேசுவதையும், அனுதாபம் காட்டி நடந்து கொள்வதையும் அறவே நிறுத்த வேண்டும்.

தமிழ்நாட்டு அரசியல் தலைவர்களுள், முதல்வர் ஜெயலலிதாவைத் தவிர வேறு யாரும் கதிர்காமரின் மரணம் குறித்து அதிர்ச்சி தெரிவிக்கவில்லை; கொலையைக் கண்டனம் செய்து அறிக்கை விடவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. நிருபர்கள் கேள்வி கேட்ட பிறகே, கருணாநிதி இக்கொலையால் தாம் அதிர்ச்சியுற்றதாகக் கூறியிருக்கிறார்.

இனியும் தமிழகத்தில் புலிகள் அனுதாப அரசியல் நடத்தினால், இலங்கையைக் காட்டிலும் அதிகமாக நாம் எதிர்காலத்தில் பாதிக்கப்படுவோம்; காயமுறுவோம்! ○



# தியாவின் கோடம்பாக்கத்துக் கோபங்கள்!

கிளாமரிலிருந்து விலகி, பாவாடை - தாவணி கட்டிக் கொண்டு தாம் நடித்த 'கோடம்பாக்கம்' படத்தைத்தான் இப்போதைக்கு நகம் கடித்தபடி எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார் தியா.

'சரி, கோடம்பாக்கம், அதாவது தமிழ் சினிமா மீதான உங்கள் குற்றச்சாட்டுகளைக் கூற முடியுமா?'' என்று தியாவிடம் கேட்டோம். தைரியமாக முன்வந்து, தம் ஆதங்கத்தைக் கொட்டினார்.

● தயாரிப்பாளருக்கும் இயக்குனருக்கும் சண்டை, அவருக்கும் இவருக்கும் சண்டைன்னு எந்தவித மோதல்களும் இல்லாம, முதல்ல படத்தை சொன்ன தேதியில் முடிக்கணும்.

● அதே மாதிரி எங்களுக்கு சம்பளமும் ஒழுங்கா தரணும்.

● ஹீரோதான் ஒரு படத்துக்கு முக்கியம்னா, எங்கே, ஹீரோயின் இல்லாம ஒரு படத்தை எடுக்கச் சொல்லுங்க பார்ப்போம்! ஒரு பய வந்து படம் பார்க்க மாட்டான்.

● படமும் நல்லாயிருக்காது; கதையும் நல்லாயிருக்காது. ஆனாலும் பெரிய ஹீரோ நடிச்ச படங்கிறதால, அது இருநூறு நாள் ஓடறதைப் பார்க்கும்போது என்னால் ஜீரணிச்சுக்கவே முடியலை. ஒருவேளை பெரிய ஹீரோ பெயரையும் புகழையும் காப்பாத்தறதுக்காக, படத்தை ஓட்டறாங்களோ?

● பெரிய நடிகரோடு நடிச்சிருக்காங்களா, ஹிட் படத்துல உண்டா, 'பிடி அந்த ஹீரோயினை' என்கிற பரிதாப நிலைமைதான் இங்கிருக்கு.

● தமிழ் தெரிஞ்ச பத்மினியும், வைஜெயந்திமாலாவும் தமிழ்ப்படத்துல நடிச்சபோது, அதுல ஒரு நளினம் இருந்தது. ஆனா, இன்னைக்கு வர்ற மும்பை நடிகைகள்கிட்ட தமிழ்ப் பெண்களுக்குரிய பாடி லாங்வேஜும்; வெட்கமும் நாணமும் இருக்குங்கிறீங்க? கஷ்டகாலம்!

● ஒரு ஹீரோயின் சினிமாவுல தன்னோட மவுசு குறைஞ்சவுடனே டீ.வி சீரியலுக்குத் தாவிடறாங்க. அதைவிட பரிதாபமானது, ஜோடியா நடிச்சவருக்கே அம்மா வேஷம் போடறது.

இவ்வளவும் நான் தைரியமா சொல்றதுக்குக் காரணம், இன்னும் கொஞ்ச நாள்ல நான் சினிமாவிலிருந்து விலகி, டான்ஸ் ஸ்கூல், ஈவன்ட்ஸ் ஆர்கனைசிங்னு கிரியேடிவ்வா ஈடுபடப் போறேன். 'சினிமாதான் என் இறுதி மூச்சு'ங்கிற டயலாக்கெல்லாம் அடிக்கிற ஆள் நான் கிடையாது.

- ச.ந. கண்ணன்



# சென்சார் போர்டுக்குக் கேவலமில்லையா?



* எஸ்.வி. சேகர்

உயர்நீதிமன்றம் தடை செய்யும் அளவுக்கு ஆபாசம் நிறைந்திருந்த 'நியூ' படத்தை, அன்றைய சென்சார் குழு எப்படி அனுமதித்தது? அதில் இடம் பெற்றிருந்த பெண் உறுப்பினர்கள் ஏன் ஆட்சேபம் தெரிவிக்கவில்லை? இப்படி ஒரு தீர்ப்பு வந்திருப்பது சென்சாருக்குக் கேவலமில்லையா? போன்ற கேள்விகளுடன் 'நியூ' திரைப்பட சென்ஸார் குழுவில் இடம் பெற்றிருந்த பெண் உறுப்பினர் வானதி ஸ்ரீனிவாசனைச் சந்தித்தோம்.

''இதைவிட மோசமான படங்கள் நிறைய வந்துள்ளன. அவை எல்லாம் நீதிமன்ற கவனத்துக்குப் போகாமல் தப்பிவிட்டன. கதையமைப்புக்கு ஏற்றவாறு ஆபாசம் சில இடங்களில் அனுமதிக்கப்படுவது, சென்சாரின் நடைமுறையில் உள்ளதுதான். நிறைய கட்டுப்பாடுகள் போட்டால், படைப்பாளிகளின் சுதந்திரம் பாதிக்கப்படும். நியூவைப் பார்த்து முடித்ததும், தணிக்கைக் குழு எட்டு மணி நேரத்துக்கு மேல் விவாதித்தது. இருபதுக்கு மேற்பட்ட காட்சிகளை நீக்க உத்தரவிட்டு, அப்படத்துக்கு 'ஏ' சான்றிதழ்



* வானதி ஸ்ரீனிவாசன்



* பாபு ராமசாமி

பரிந்துரைத்தோம். படம் வெளியானதும் கல்கி இதழ்னு நினைக்கிறேன்.... கடும் விமர்சனம் எழுதியிருந்தார்கள். சென்சார் பற்றியும் கேள்வி எழுப்பியிருந்தார்கள். அது என்னை பாதித்தது.

சூர்யா மீண்டும் ஒரு ஆபாசப் பாடலை நியூவில் சேர்க்க வேண்டும் என்று சென்சாரை அணுகியபோது... நான் கடும் ஆட்சேபம் தெரிவித்தேன். கோபத்தில் தனது செல்ஃபோனை என் மீது தூக்கி வீசினார் எஸ்.ஜே. சூர்யா. இப்படத்தின் ஆபாசத்துக்காகவே மக்களால் நிராகரிப்பட்டுவிடும்னு நினைத்தேன். இந்தத் தீர்ப்பு எனக்கு கூடுதல் மகிழ்ச்சிதான். இனி தரமற்ற படங்கள் வந்தால், மக்கள் தைரியமாக நீதிமன்றத்தை அணுகுவார்கள்'' என்றார்.

நியூ படம் வெளிவந்தபோது சென்சார் போர்டின் மண்டலத் தலைவராக பொறுப்பில் இருந்து, சான்றிதழில் கையொப்பம் இட்டவர் நடிகர் எஸ்.வி. சேகர். ஈரோட்டில் இருந்த அவரிடம் தொலைபேசியில் கேட்டபோது...

''நியூ படத்துக்கு, நியூவா தீர்ப்பு வந்திருக்கு'' என்று சிரிப்பூட்டியவர், தொடர்ந்து சொன்னார்... ''58, 70களில் உள்ள சமூக அமைப்புக்குத் தக்கவாறு சென்சார் சட்டம் பல விஷயங்களில் இருக்கு. இன்னைக்கு பார்ல இளம் பெண்கள் மது அருந்தறாங்க. டான்ஸ் ஆடுறாங்க. சமூகத்துல நடக்கிறதத்தான் சினிமாவுல காட்டுறோம்னு சினிமாக்காரங்களும், சினிமாவப் பார்த்துத்தான் சமூகம் கெடுதுன்னு எதிர்தரப்பும் மாறி மாறி குற்றம் சாட்டுறாங்க.

''நான் மேலை நாட்டுப் படங்களைப் பார்ப்பவன். அந்தக் கோணத்தில் நியூ படத்துக்கு ஏ சர்டிஃபிகேட் வழங்கினோம். 'ஏ' படத்துக்கு குழந்தைகளோடு ஏன் போகணும்?

''இப்போ நான் சென்சாரில் இல்லை. இது விஷயமா ரொம்ப விரிவா பேச விரும்பலை. எப்படியிருந்தாலும் இந்தத் தீர்ப்பை வரவேற்கிறேன். மதிக்கிறேன். இதேபோல ஒரு வழக்குப் போட்டு, டி.வி வழியா வீட்டுக்குள்ள வரும் ஆபாசப் படங்களுக்கும் தடை வாங்கணும்ம்னு கேட்டுக்கிறேன்'' என்றார்.

சென்சார் போர்டின் தற்போதைய மண்டல அதிகாரி, பாபு ராமசாமியிடம் கருத்துக் கேட்டோம். ''நான் சென்னைக்கு வந்து இன்னும் ஒரு மாதம்கூட முடியவில்லை. நியூ திரைப் படத்தில் எனக்கு முன்பு இருந்த அதிகாரியால் நீக்கப்பட்ட காட்சிகள் மீண்டும் திரையிடப்படுவதைக் கண்டறியப்பட்டு, காவல் நிலையத்தில் இரு புகார்கள் பதிவு செய்யப்பட்டன. இந்த வழக்குக்கு அவையும் வலு சேர்த்துள்ளன.

''சென்சார் போர்டினால் படத்தைத் தணிக்கை செய்து அனுமதி வழங்கத்தான் முடியும்.வழங்கிய அனுமதியை ரத்து செய்ய முடியாது. மந்திரிசபைக்கும், நீதிமன்றத்துக்கும்தான் அந்த அதிகாரம் இருக்கிறது. இந்தத் தீர்ப்பினால் எங்களுடைய வேலை எளிதாகியுள்ளது. எங்களுக்கு பலம் சேர்ந்துள்ளது'' என்றார்.

இத் தீர்ப்பினால் சென்சார் விழித்துக் கொள்ளுமா? கெடுபிடி, லஞ்சப் புகார்களில் சிக்காமல் தரம் உயர்த்திக் கொள்ளுமா? விடை கிடைக்கக் காத்திருப்போம்.

- யாணன்

# 4

*'உயிர்களுக்கெல்லாம்*
*நான்*
*கண்ணானவன்*
*அதனாலேயே*
*கண்ணனுமானேன்'*
*- ஸ்ரீ கிருஷ்ணன்*

**"இவ்வளவு நடந்ததைப் பார்த்த பிறகும் உனக்கு நம்பிக்கை வரலையா?"**



**நா**டி ஜோசியக்காரன் பாட்டுப்படி சாருவை நோக்கி அந்த நீர்ச் சுழலும் வந்துவிட்டது. அதே சமயம் அவன் சொல்லாத ஒரு விஷயமும் அங்கு நடக்க ஆரம்பித்தது. ஆற்றுக்குள் ஒரு பக்கமாய் தன் பசுங்கன்றுக் குட்டியை குளிப்பாட்டுவதற்காகக் கொண்டு நிறுத்தியிருந்த வஜ்ரவேலு என்பவன், சுழலைப் பார்த்து விட்டான். அது சாருவை நெருங்கி விட்டதையும் பார்த்தவன் "அம்மா! இப்படி வந்துடுங்க..." என்று அலறியபடியே பாய்ந்து, அவளது தலைமுடியை இறுகப்பற்றிக் கொண்டு ஒரு இழு இழுத்தான்.. கரைவெளியே ஸ்தம்பித்த அந்த நொடிப் பொழுதில் சாரு தப்பி விட்டாள். ஆனால் பாவம் அவனது பசுங்கன்றுக் குட்டி....!

அது ஜலத்தாரையோடு இழுத்துச் செல்லப்பட, அப்படியே நொறுங்கிப் போய் கரையின் கல் திட்டின் மேல் அமர்ந்து விட்டாள் சாரு. ஓடி வந்த சம்பத்துக்குள்ளும் தாறுமாறான இதயத் துடிப்பு!

''அம்மாடி, இது உனக்கு மறு ஜென்மம்!'' - என்றாள் அவ்வளவையும் பார்த்தபடி இருந்த படித்துறை கிழவி ஒருத்தி!

**ஊ**ஞ்சல் பலகை மேல் சீனு! அருகில் மேஜையை ஒட்டி மௌனமாக ராஜம். இருவர் எதிரிலும் குட்டி போட்ட பூனை போல நடந்தபடியே சம்பத். சாரு அதிர்ச்சியில் இருந்து விடுபடாதவளாக உள்ளே அறையில் கட்டிலில் படுத்திருந்தாள்.

"ஏண்டா... இப்படியே குட்டி போட்ட பூனை மாதிரி நடந்தா ஆச்சா...? அதான் அந்த நாடி ஜோசியக்காரன் சொன்ன மாதிரி எல்லாமும் நடந்துடுத்தே. இதுக்கு மேலயும் அவன் எதானா சொன்னானா?" - ராஜம் ஆரம்பித்தாள்.

"எங்கம்மா... சாரு அவன் சொல்ல வந்த எதையும் கேட்டுக்கவே விடலை. அந்தப் பரிகாரம், இந்தப் பரிகாரம்னு என்னென்னமோ சொன்னான். எனக்கு பளிச்சின்னு தெரிஞ்சதெல்லாம் ஒண்ணுதான். கங்கைல குளிக்கணும். குளிச்சு முடிச்ச கரை ஏறிய கையோட, இருபத்தியொரு சன்யாசிகளுக்கு என் கையால தாம்பூலம் கொடுக்கணும்னான். அதே போல நம்ம ஆத்துக் கண்ணன் பத்தியும் நிறையச் சொன்ன மாதிரி தெரியறது" என்ற சம்பத்தை சீனு சற்று கோபத்தோடு பார்த்தார்.

"ஒரு விஷயத்துல நம்பிக்கை இல்லேன்னா போகக் கூடாது. மீறி நம்பிட்டா அதை முழுசா செயல்படுத்தணும். இப்படியா இரண்டும் கெட்டானா இருப்பே?" - அவரது கோபம் உள்ளே கட்டிலில் கிடந்த சாருவை உசுப்பி எழுப்பியது.

"நான் ஆரம்பத்துல இருந்தே வேண்டாம்னு தான் சொன்னேன். இன்னிக்கு பிள்ளை பெத்துக்கறது ஒண்ணும் பெரிய விஷயமே இல்லை. இரண்டு பேரும் மலடா இருந்தாக் கூட, ஆர்ட்டிஃபிஷியல்



# எங்கே என் கண்ணன்?

மெதட்ல கன்சிவ் ஆக நிறைய வழிகள் இருக்கு. அதுல ஏதாவது ஒரு வழில போவோம்னு தான் நான் இவரண்ட சொன்னேன். இவர் தான் கேக்காம, நாடி ஜோசியம், அது இதுன்னு அந்தப் பக்கமா போனார். அவனும் நாங்க நன்னா கார்ல வந்து இறங்கறதைப் பார்த்துட்டு, பெரிய கைதான், ஒரு பிடி பிடிச்சுடலாம்னு நினைச்சுட்டான். ஆனா நான் உடனேயே சுதாரிச்சுண்டுட்டேன்." சாருவின் பேச்சு



இந்திரா செளந்தர்ராஜன்

சீனுவைத் திகைக்க வைத்தபடியே இருந்தது.

"முதல்ல பெருவிரல் ரேகை கொடுங்கோன்னான். அப்புறமா உங்க அப்பா பேர் கிருஷ்ணனா, ராமனான்னு எங்க வாயாலயே போட்டு வாங்கி தெரிஞ்சுக்கப் பார்த்தான். நான் மூச்சு விடலை. இவர்தான் அவன் கேட்டதுக்கெல்லாம் பதில் சொல்லிண்டே வந்தார். கடைசில நான் நினைச்ச மாதிரியே, காசிக்குப் போ, கங்கைல குளி, வெத்தலை பாக்கு கொடு, அப்புறம் ஒரு ஊனமுற்றவனுக்கு ஒரு மண்டலம் சாப்பாடு போடு, எனக்கும் குரு தட்சணையா ஒரு பித்தளை அண்டாவுல நவதானியங்களை வழிய வழிய வாங்கிண்டு வந்து கொடு'ன்னு அடி போட ஆரம்பிச்சுட்டான். எனக்கு புரிஞ்சுபோச்சு. அவன் எங்களை வெச்சே மளிகைக் கடை வைக்கப் போறான்னு..."

- சாரு சொல்லும் தொனியில் இருந்தே, அவன் அவ்வளவுக்குப் பிறகும் கூட அந்த ஜோதிடத்தை துளிக் கூட நம்பத்தயாராக இல்லை என்பது தெளிவாகியது.

சீனு அதற்கு மேல் அவள் பேசத் தேவையில்லை என்பது போல, ஊஞ்சலை விட்டு எழுந்து நின்றார். குண்டஞ்சி வேஷ்டி அங்கவஸ்ரத்தை மார்பில் இழுத்து பரத்திக் கொண்டார். பன்னிரண்டு திருமண் காப்போடு, ஆறடி உயரத்திற்கு ஒரு கம்பீரத்தின் விஸ்வரூபம் போல அவரது உருவம் காட்சியளித்தது.

"இருங்கோ, இன்னும் ஒரு விஷயம் பாக்கி இருக்கு." அவள் அவரைத் தடுத்தாள். அவரும் இமைக்காத விழிகளோடு ஒரு சாய்வுப் பார்வை அவனைப் பார்த்தார். "இந்த ஆத்துல இருக்கே ஒரு கிருஷ்ணன் பொம்மை, அதான் பைத்தியக்காரன் தூக்கிண்டு ஓடினானே...?" - அவள் பொம்மை என்று சொன்னது சீனுவுக்குள் ஓர் ஊசியாகிக் குத்தியது.

"சாரு நீ இரு... நான் சொல்றேன். இது எனக்கு ஞாபகம் இருக்கு" - என்றபடியே சம்பத் ஆரம்பித்தான்.

"அப்பா... நம்ம ஆத்துப் பெருமாள் ரொம்ப சக்தியானவராம். திவ்ய தேசங்கள்ள இருக்கற பெருமாள் மாதிரியே தான்... நித்யப்படி ஆராதனையை தடையில்லாம தொடர்ந்தா, நிறைய அதிசயங்கள உணரலாம்னு சொன்னார் அந்த ஜோசியர்." - என்ற சம்பத்தின் பதிலில் நாடி ஜோதிடத்தை அவன் நம்புவது ஒளிந்திருந்தது.

"அது சரி... அது என்ன அதிசயம்னு சொல்ல வேண்டாமா? அதைக் கேட்டா, அதுக்கு தனியா காண்டம் பாக்கணும்கறான். முந்நூறு வருஷமா இந்த ஆத்துலையும்தான் பூஜை நடக்கறது. இவ்வளவு நாளா நடக்காத அதிசயம் இனிதான் நடக்கப் போறதாக்கும்?"

- சாருவின் கேள்வியில் சரியான குத்தல்! சீனு தொண்டையை செருமிக் கொண்டார். பெரிதாக ஒரு முடிவுக்கு வந்து விட்ட தோரணையைக் காட்டியவர், "சரிப்பா... இப்ப நீ என்ன பண்ணப் போறே... காசிக்குப் போய் பரிகாரம் பண்ணப் போறியா? இல்ல, உன் ஆத்துக்காரி நினைக்கற மாதிரி இதெல்லாம் பித்தலாட்டம்கறது உன் முடிவா?" என்று சம்பத்தைப் பார்த்துக் கேட்க, அவனிடம் ஒரு குட்டித் திணறல். பதில் சொல்ல முடியாமல் சாருவைப் பார்த்தான்.

"இதோ பாருடா சம்பா... ஜோசியக்காரன் சொன்னது பொய்யோ மெய்யோ, ஒரு நடை ஹரித்துவார் இல்லேன்னா காசி வரை போய், அந்த கங்கைல முழுக்குப் போட்டுட்டு, இருபத்தியொரு

"சாமியார் புதுசா 'அருள் இல்லாத வாக்கு' சொல்றாராமே... ஏன்?"
"இப்ப முன் ஜாமீன்ல இருக்காரே!"
- அம்பை தேவா






பேருக்கு வெத்தலை பாக்கும் கொடுத்துட்டும்தான் வந்துடேன். இதனால எது கொறைஞ்சிடப்போறது?" – என்று ராஜம் தன் கருத்தாகச் சொன்னதற்கு, சீனுவிடம் ஓர் அதட்டலான பார்வை.

"என்ன யோசனை...? அம்மா சொல்ற மாதிரி, ஒரு பிக்னிக் போற மாதிரி போய்ட்டு வரணும்னாலும் குறைஞ்சது நாலு நாளாவது தேவை. உங்க ஆபீஸ்ல லீவு தருவானா? இப்ப பார்த்து உங்க சேர்மேன் உங்களைக் கூப்பிட்டு அந்த ஜெர்மன் ப்ராஜக்டையும் சேர்த்து பார்த்துக்கச் சொல்லிட்டார். நீங்க உத்யோகத்தப் பார்ப்பேளா... இல்ல இருபத்தியொரு பிச்சைக்காராளத் தேடிண்டு போவேளா?"

– சாரு சம்பத்தை ஒரு சங்கிலியால் கட்டி இழுப்பது போல இழுத்தாள். சீனுவால் அதற்கு மேல் பொறுமையாயிருக்க முடியவில்லை.

"அம்மாடி... இவ்வளவு நடந்ததைப் பார்த்த பிறகும் உனக்கு நம்பிக்கை வரலையா?" - என்று அவளிடமே நேராக ஆரம்பித்து விட்டார்.

"என்ன பெருசா நடந்துடுத்து?"

"அதான் ஆத்துப் பெருமாள் விக்ரகம் காணாமப் போச்சு, உன்னையும் சுழல் கொண்டு போகப் பார்த்தது..."

"இதை நான் ஜஸ்ட் கோஇன்சிடென்ஸா தான் நினைக்கறேன்... இப்படி ஒருத்தர் லைஃப்ல நடக்கறதையெல்லாம் முன் கூட்டியே சொல்ல முடியும்னா, குறிப்பா சுழல் வரும், திருட்டு போகும்னு எழுதியே சொல்ல முடியும்னா, சுனாமி பத்தி அவன் சொல்லி பல உயிர்களைக் காப்பாத்தலாமே... பின்லேடன் ஒளிஞ்சிண்டிருக்கற இடத்தை சொன்னா, எங்கையும் குண்டு வெடிக்காதே?"

– சாரு பெரிதாக மடக்கிவிட்டதாகக் கருதி சீனுவை வெறிக்க, அவரோ ஒரு கேலிச் சிரிப்பு சிரித்தார்.

"என்ன மாமா சிரிக்கறேள்...?"

"இல்ல... இந்த புத்திய நினைச்சேன்... சிரிப்பு வந்துடுத்து. இதுக்கு சந்தேகப் படத் தெரிஞ்ச அளவுக்கு எதுலையும் நம்பிக்கை வைக்கத் தெரிய மாட்டேங்கறது."

"அதுக்கென்ன பண்ண முடியும்? நடக்கறது கலியுகமாச்சே... மாயா ராஜ்யமாச்சே. உண்மை பொய்ய எல்லாராலயும் விளங்கிக்க முடியுமா என்ன?"

"நீங்க என்ன சொல்றேள்...? ஆபீஸ் வேலையை விட ஹரித்துவாருக்கும் காசிக்கும் போறதுதான் இப்ப உசிதம்கறேளா... ஜோசியக்காரன் சொல்றதை நம்பச் சொல்றேளா...?"

"நீ நம்பாதேம்மா... நீ இப்படியே இரு. இதே மாதிரியே யோசி. ஆனா நான் நம்பறேன். இப்ப என்ன...? உங்களால போக முடியலேன்னா, நாங்க போய்ட்டுப் போறோம். சம்பத், நானும் உங்கம்மாவும் நாளைக்கே ஹரித்வார் கிளம்பறோம். அப்படியே வழியில காசிக்கும் வந்து எல்லா பிரார்த்தனைகளையும் பண்ணிண்டு வரோம். நீ உன் உத்யோகத்தைப் பாரு" – என்று ஒரு முடிவுக்கு வந்தவர், கோவில் மணிச் சத்தம் கேட்டு தரிசனத்துக்காகக் காலெடுத்தார். வாசற்படி தாண்டும்போது சட்டென்று கண்ணன் ஞாபகம் வந்தது.

'அடடா... இவனுக்காக நித்யப்படி பூஜைகளை யார் செய்வது?'

– பிரதானமான அந்த கேள்வி ஒரு நங்கூரம் போல அவர் மனதில் விழுந்தது.

(தொடரும்)

ஏதாவது விசேஷ தினம் என்று வந்து விட்டால் போதும், நம் டீவிகளுக்குக் கொண்டாட்டமாக இருக்கும். நாள் முழுவதும் சிராய்ப்பு... ஸாரி... சிறப்பு நிகழ்ச்சிகளாக வழங்கி, மக்களை வறுத்தெடுத்து விடுவார்கள்.

இந்த சுதந்திர தினத்தின் போதும், நம் தமிழ் சேடிலைட் சானல்கள் பேருக்குக் கூட நாடு, சுதந்திரம் போன்றவற்றைப் பற்றியெல்லாம் கவலைப்படவில்லை. அன்றைய தினம் கை வலிக்க ரிமோட்டை அழுத்தி அழுத்தி, நாம் கண்ட சில நிகழ்ச்சிகள் :

# நமீதாவின் மைல்கல்!

★ ஜெயாவில் காலையில் ஒளிபரப்பான 3டி அனிமேஷன் நிகழ்ச்சி எதிர்பாராத குதூகலம். 'ஏ சிங்கம் போல' பாடலுக்கு தாண்டவமாடிய புலியின் வீரா வேசம் இன்னமும் கண்ணிலேயே நிற்கிறது.

★ பெரும்பாலான சேனல்களில் நமீதா, ஸ்ரீகாந்தின் பேட்டிகளைக் காண முடிந்தது. நமீதாவின் பேட்டியில் கிடைத்த அரிய தகவல், அவர் சைவமாம்! பேட்டியெடுத்தவர், "அர்ஜுனா அர்ஜுனா பாடலில்தான் யார் நமீதா என்று தெரிய வந்தது. அதுவே அவருடைய மைல்கல்" என்று தாராளமாகப் பாராட்டினார்.

★ பெண்கள் கல்லூரிக்குச் சென்று சுமார் 50 பட்டாம் பூச்சிகளிடம் கடலை போட்டுக் கொண்டிருந்தார் ஜெயம் ரவி. "உங்க பேர் என்ன?" என்று மாணவிகளிடம் ரவி கேட்டபோது, ஒரு மாணவி முந்திக் கொண்டு, "எங்க எல்லோருக்கும் ஒரே பெயர்தான், ஐஸ்வர்யா ராய்" என்று சாமர்த்தியமாக பதிலளிக்க, 'ஓ' என்று அலறினர் இதர மாணவிகள்.

★ விக்ரமை 'மஜா' படப்பிடிப்பு நடக்கும் காரைக்குடிக்குச் சென்று பேட்டியெடுத்தார் மதன். ஒரு பள்ளிக்குச் சென்று

# நிலவே...நீ காஸ்ட்லி!



மெரினா, ஸ்பென்ஸர் பிளாஸா, நூலகம், பூங்கா... இந்த வரிசையில் காதலர்கள் கையை கோத்துக் கொண்டு மிதக்கப் போகும் அடுத்த இடம் நிலவுதான். சுற்றுலாப் பயணிகளுக்கு நிலவை சுற்றிக் காண்பிக்க, வர்ஜீனியாவிலுள்ள ஸ்பேஸ் அட்வென்சர்ஸ் எனும் தனியார் நிறுவனம் தயாராகிக் கொண்டிருக்கிறது.

ஒரு குட்டி வான்வெளி வண்டி. ஷேர் ஆட்டோ மாதிரி அடித்துப்பிடித்து கும்பலாக ஏற முடியாது. இரண்டு பயணிகள்தான் உட்கார முடியும். பயப்படத் தேவையில்லை. 'போய்ச் சேர்ந்தவுடனே ஃபோன் பண்ணுங்க' என்று சொல்லி நழுவிக் கொள்ள மாட்டார்கள். கூடவே ஒரு பைலட்டையும் அனுப்புவார்கள். நீங்கள் ஏதாவது சந்தேகம் கேட்டு, அது அவருக்கு புரிந்தால் கட்டாயம் விளக்குவார்(!)

பூமியில் இருக்கும்பொழுது அண்ணாந்து பார்க்க நேரமில்லாதவர்கள்,



சுதந்திர தினத்தைக் கொண்டாடினார். விக்ரம். (செட்-அப்?) விக்ரம் விடை பெறும் பொழுது, 'அண்ணா அண்ணா' என்று டிரவுசர் அணிந்த மாணவர்கள் ஆட்டோகிராஃப் வாங்க அடித்துக் கொண்டதும், அவரது ஜீப் பின்னாலேயே ஓடியதும் காணத் தகுந்த காட்சிகள் அல்ல.

• தமது நிகழ்ச்சியை எப்படியாவது பார்க்க வைப்பதில் 'சன்'னுக்கு நிகர் வேறு எவருமில்லை. அன்றைய தினம் சன் மியூசிக்கில் பழைய பாடல்களாகப் போட்டுத் தள்ள, ஆட்டோமெடிக்காக சிறப்பு நிகழ்ச்சிகளுக்கு அனைவரும் தாவினர்.

**- ச.ந.கண்ணன்**

# இளமை கல்கி

சாவகாசமாக வானத்திலேயே போய் நிலவை பக்கத்திலிருந்து ரசிக்கலாம். அதற்காக ஆம்ஸ்ட்ராங் மாதிரி உள்ளே போய் இறங்கி, குதித்து, புரண்டு, கொடி ஏற்றி, பாக்கெட்டில் கொஞ்சம் கல், மணல் எல்லாம் போட்டு ரொப்பிக் கொண்டு வர முடியுமா என்று தெரியவில்லை. சாக்பீஸால் நிலவிலுள்ள பாறையில் 'ஐ லவ் யூ ஸ்வீட் ஹார்ட்' என்று கிறுக்கலாமா என்று தெரியவில்லை. அதேபோல் புளிசாதம், தயிர்சாதம் எல்லாம் வாழை இலையில் கொண்டு போகலாமா என்பது பற்றி எந்தத் தகவலும் வெளியிடப்படவில்லை.

எல்லாம் சரி, இந்த நிலா பயணத்துக்கு எவ்வளவு செலவு பிடிக்கும், கொஞ்சம் அதிகமாகவே. அதாவது 100 மில்லியன் டாலர், உள்ளூர் வரிகள், வாட் போன்றவற்றை பின்னால் கூடுதலாகச் சேர்ப்பார்களா என்று தெரியவில்லை. இவ்வளவு பெரிய தொகையை வசூலிப்பதால், ஆளுக்கொரு மினரல் வாட்டர் பாட்டில் இலவசமாகக் கொடுப்பார்கள் என்று நம்பலாம். 2008இல் தான் இந்தப் பயணம் தொடங்கப்போகிறது என்பதால், காதலர்கள் இப்பொழுதிலிருந்தே சீட்டுக் கட்ட ஆரம்பிக்கலாம். இல்லையென்றால் இன்னொரு உபாயமும் இருக்கிறது: 'அன்பே உன் முகமே நிலவு போல் தான் இருக்கிறது. எதற்கு அநாவசியமாக மேலே போய்ப் பார்க்க வேண்டும்?' என்று சொல்லி சமாதானப்படுத்திப் பார்க்கலாம்.



**- மருதன்**

# கேட்கிறது தமிழ் படிக்கிறது இங்கிலீஷ்!

### அறிமுகம்

என் பேரு விஷ்வா... ஆனா 'மெட்டி ஒலி' முடிஞ்ச பிறகும்கூட 'செல்வம்'னு சொன்னாத்தான் எல்லாருக்கும் தெரியுது. படிச்சது பி.எஸ்.ஸி கம்ப்யூட்டர் சயின்ஸ்... நடிப்புலயே கவனம் இருந்ததால, வேலையில மனசு ஓடலை. கடைசில நண்பர்கள் உதவியோட சன் டீவியில 'நம்ம நேரம்' புரோக்ராம் மூலமாச் சின்னத் திரைக்கு வந்துட்டேன்.

### சீரியல்

முதல் வாய்ப்பு 'மின்பிம்பங்கள்'கிட்டே இருந்து வந்தது. நான் நடிச்ச முக்கியமான சீரியல்கள்னா, மர்மதேசம், நான் ஏன் பிறந்தேன், அலைகள், சித்தி, மெட்டி ஒலி, நிம்மதின்னு நிறைய சொல்லாம்... மொத்தமா இதுவரை 58 சீரியல்கள்ல நடிச்சுட்டேன்.

### மறக்க முடியாத கேரக்டர்

எனக்கு அமையறது எல்லாமே நெகட்டிவ் கேரக்டர்ஸா இருந்தப்போ, திடீர்னு வந்த 'மெட்டி ஒலி' செல்வம் கேரக்டர்தான். திருமுருகன் என் மேல நம்பிக்கை வச்சு கொடுத்தார். அதை நிறைவேற்றிட்டேன்னுதான் சொல்லணும்.

### பெருமை

சின்னத்திரைக்கு வந்து ஆறே வருஷத்துக்குள்ள பாலசந்தர், சி.ஜே. பாஸ்கர், சுந்தர் கே. விஜயன், திருமுருகன், திருச்செல்வம், தண்டபாணி மாதிரி பெரிய டைரக்டர்ஸ்கூட ஒர்க் பண்ண வாய்ப்பு கிடைச்சதுதான்.

### கெட்டப்

இதுக்கு நான் ரொம்ப முக்கியத்துவம் கொடுப்பேன். இல்லன்னா, ஆடியன்ஸ் எல்லா சேனல்லயும் நம்மள ஒரே மாதிரியே பார்த்து கடைசியில

# கூகிள் எர்த்!

.... இந்த இடத்தில் உங்கள் மனதுக்குப் பிடித்த பின்னணி இசை எதையாவது ஓட்டிக் கொள்ளுங்கள். இனி... விவரிக்கப்படும் காட்சியை அப்படியே உங்கள் மனதின் டிடிஎஸ் தியேட்டருக்குள் ஓட்டிக் கொள்ளுங்கள்...

பால்வெளியிலிருந்து பூமி தெரிகிறது. நாம் அதை நெருங்குகிறோம். கண்டங்கள், பெருங்கடல்கள் நம் கண்களில் நிறைகின்றன. நம் கைகளால் நம் இஷ்டப்படி சுழற்ற முடிகிறது. மேலும் நெருங்குகிறோம். உயரம் குறைகிறது. இந்தியாவுக்குச் செல்ல மனம் விரும்புகிறது. பயணம் தொடர்கிறது. நம் கண்கள் எனும் விமானம், இமைகள் எனும் இறக்கைகளை விரித்து தரையிறங்க ஆரம்பிக்கிறது. கடல்வெளி... மெல்ல மெல்லக் கட்டடங்கள் தெரிய ஆரம்பிக்கின்றன. சைதாப்பேட்டை, கிண்டி, தாம்பரம் என ஒவ்வொரு இடத்தையும் நெருங்குகிறோம். திடீரென ஈஃபிள் டவரை, பார்க்க வேண்டும், மனம் நினைக்க



வெறுத்துடுவாங்க. அதனாலதான் ஒவ்வொரு கேரக்டருக்கும், வித்தியாசமான ஹேர்ஸ்டைல், காஸ்ட்யூம், குரல்னு பயன் படுத்தறேன்.

**ஆசை**

சீக்கிரமா டைரக்டராகணும்னு ஆசை இருக்கு. ஆனா அது நிச்சயமா சீரியலா இருக்காது. கண்டிப்பா சினிமாவாத்தான் இருக்கும். அதுக்காக இப்போவே நிறைய விஷயங்களை உன்னிப்பாக் கவனிச்சு, கத்துக்கிட்டு இருக்கேன்.

**பொழுதுபோக்கு**

தமிழ்ப் பாட்டு கேட்டுகிட்டே இங்கிலீஷ் நாவல் படிக்கறதுதான் என்னோட ஹாபி... இப்போ ஹாபிட்டாவே ஆயிடிச்சு...

**- கலை**





## இணைய கல்கி

மீண்டும் உயரப் பறக்க ஆரம்பிக்கிறோம். பூமி உருண்டை சுழல ஆரம்பிக்கிறது. அடுத்த ஐந்தாவது நொடி நாம் பாரிஸின் மேல் பறந்து கொண்டிருக்கிறோம்.

அட... என்னப்பா இதுன்னு ஆச்சரியப்படுறீங்களா! ஆச்சரியம்தான். இணைய உலகில் கூகுளின் அடுத்த அசத்தல் இதுதான். 'கூகுள் எர்த்!' - இப்போது வலையில் சாட் செய்யும் இளைஞர் கூட்டம், அதையெல்லாம் மறந்து ஹாட்டாகப் பார்த்துக் கொண்டிருப்பது இதைத்தான்!

கூகுள் எர்த்?! - ஆம் உலகையே படம் பிடித்து (3டி) இணையம் மூலமாகக் காட்டுகிறது இது! (இரு வருடங்களுக்கு முன்பு எடுத்த படங்கள்!) நாம் பார்க்க வேண்டிய ஊரை (இடத்தை, நாட்டை) தட்டினால் சில நொடிகளில் கொண்டு போய் இறக்கிவிடுகிறது. தற்சமயம் அமெரிக்காவில் இருக்கும் தெருக்கள், அதில் எத்தனை வீடுகள் உள்ளன, அங்கே எத்தனை கார்கள் நிற்கின்றன என்று கூடத் தெளிவாகப் பார்க்க முடிகிறது. யு.கே., ஐரோப்பிய நாடுகள் சிலவற்றுக்குள் ஓரளவு தெளிவான காட்சிகள் கிடைக்கின்றன. ஆசிய நாடுகள் இன்னும் தெளிவாகக் காண்பிக்கப்படவில்லை. சீனப் பெருஞ்சுவர் போன்ற உலகப் புகழ் பெற்ற இடங்கள் தெளிவாகத் தெரிகின்றன.

அடுத்து என்ன.. இன்னும் சில ஆண்டுகளில்... பேசுவோம்!

"டேய் மச்சான், கூகுள் எர்த்ல இருக்கியா... ஓ.கே. அப்படி மதுரைக்கு வா. மேல மாசி வீதிக்கு வா. வந்துட்டியா. அதுல அந்த மூணாவது வீட்டு மொட்டை மாடியில ப்ளூ கலர் டி-ஷர்ட் போட்டு நிக்கிறேன் தெரியுதா...?"

**- முகில்**

அந்த எளிமையான வீட்டு வாசலின் முன் வந்து நின்றார் தமிழ்மணி.

வாசல் திண்ணையில் அமர்ந்து முறத்தில் அரிசியைப் புடைத்துக் கொண்டிருந்த பெண்மணி, அருகில் நிழலாடவே தலையைத் திருப்பிப் பார்த்தாள்.

"அம்மா வணக்கம். தியாகி நமச்சிவாயம் வீடு இதுதானுங்களே. ஐயா இருக்காரா?"

"உள்ளே இருக்காரு, போங்க. ஏனுங்க" என்று உள்நோக்கிக் குரல் கொடுத்தாள்.

தமிழ்மணி உள்ளே நுழைந்தார். சாதாரண ஓட்டு வீடுதான். நடுவில் முற்றமும், அதைச் சுற்றி ஓடும் கூடமும் பனிச்

**"உங்களுக்கு இப்ப மூவாயிரமோ, நாலாயிரமோ கிடைச்சா சந்தோஷமாயிருக்குமா?"**



# பொளோர்!



சென இருந்தன. முற்றத்துக் கொடியில் கதர் வேட்டியும், சட்டையும் காய்ந்து கொண்டிருந்தன.

முற்றத்தை ஒட்டிய தூணில் சாய்ந்த படி புத்தகம் படித்துக் கொண்டிருந்த பெரியவர், தமது சாளேசுவரக் கண் ணாடி வழியே பார்த்தார்.

தமிழ்மணி அவரருகில் சென்று தரை யில் அமர்ந்தார். அவர் கையைப் பற்றி கண்களில் ஒற்றிக் கொண்டார். சுருக்கம் விழுந்து கிடந்த அவரது கைகளையும், முகத்தையும் பார்த்தார்.

'எழுபது வயதுக்கு மேல் இருக்கும் பெரியவருக்கு' என்று நினைத்துக் கொண்டார்.

"ஐயா, வணக்கம். என் பெயர் தமிழ் மணி. பக்கத்து ஊர் டவுன் பள்ளியிலே தமிழாசிரியராய் இருக்கேன்"

தியாகி நமச்சிவாயத்தின் கண்கள் பனிச்சிட்டன.

''சுதந்திர தின விழாவுக்கு அழைப்பா?'' என்று கேட்டார்.

"கற்பூர புத்தி ஐயா உங்களுக்கு. அத னாலேதான் வெள்ளைக்காரன் தாக்குப் பிடிக்க முடியாம ஓடிட்டான்" என்று புகழ்ந்தார் தமிழ்மணி.

"வெள்ளைக்காரன் நம்மைவிட அறி வில் சிறந்தவன். அவன் ஓடியது காந்திஜி யோட அறவழிப் போராட்டத்தை சந்திக் கத் தெரியாமத்தான். அறிவுக்கோ, ஆயுதத் துக்கோ பயந்து ஓடலே அவன்" என்றார் தியாகி.

''ஐயா, உங்களோட சுதந்திரப் பேராட்ட நினைவுகளையெல்லாம் கேட்க ஆசிரியர்களான நாங்களும், மாணவர்களும் ஆவலோடு காத் திருக்கோம்"

தியாகி தலையசைத்தார்.

"அடுத்த வாரம் வரும் சுதந்திர தின விழாவில் எங்க பள்ளியில் கொடியேற்றி,

கிருஷ்ணா

நீங்க உரையாற்றணும். அதுக்கு அழைக்கத்தான் எங்க பள்ளியின் சார்பில் நான் வந்திருக்கேன்"

தியாகி சிரித்தார்.

"எங்க நினைவெல்லாம் வருஷத்துல ரெண்டு தரம் தானே உங்களுக்கெல்லாம் ஞாபகம் வருது? ஏதோ அதுமட்டும் சந்தோஷம்."

தமிழ்மணி சங்கடத்துடன் நெளிந்தார். அந்த வீட்டைச் சுற்றிக் கண்களை ஓட்டினார். தொண்டையைச் செருமிக் கொண்டார்.

"ஐயா, ஒரு கேள்வி! உங்களுக்கு இப்ப மூவாயிரமோ, நாலாயிரமோ கிடைச்சா சந்தோஷமாயிருக்குமா?"

தியாகியின் பார்வை வாத்தியாரை ஊடுருவியது.

''செலவுக்கா பஞ்சம்? வீட்டுக் கூரையை மாற்றி, புது ஓடு வேயலாம். என் பொண்டாட்டிக்கு கண் ஆபரேஷன் செய்யலாம். எனக்குக் காது கொஞ்சம் மந்தமாயிட்டு வருது. ஹியரிங் எய்டு வாங்கலாம். அது நீண்டுக்கிட்டே போகும், எட்டு முழ வேட்டி மாதிரி'' என்றார் தியாகி.

தமிழ்மணி திருப்தியாய்த் தலையை ஆட்டிக் கொண்டார்.

"ஐயா, எங்க பள்ளியிலே சுதந்திர தின விழாவுக்கு, உங்க மாதிரி தியாகிகளை அழைத்து கௌரவிக்கறது வழக்கம்."

"கௌரவிக்கறதுன்னா?"

"விழா முடிவில் அன்பளிப்பாய் பண முடிப்பு தருவோம். உங்க மாதிரி தியாகிகளுக்கு எவ்வளவு கொட்டித் தந்தாலும் தகும். ஆனாலும், எங்களால் முடிஞ்சது. அவசியம் நீங்க அதை ஏத்துக்கிட்டு எங்களை கௌரவிக்கணும்"

தியாகி யோசித்தார். பின் தலையசைத்தார்.

"மிக்க மகிழ்ச்சி ஐயா. அப்புறம் ஒரு விஷயம்..." என இழுத்தார் தமிழ்மணி.

தியாகி நிமிர்ந்து பார்த்தார்.

"பண முடிப்பாய் ஐயாயிரம் ரூபாய் தருவதாய் ஏற்பாடு. ஒரு ஆயிரம் ரூபாய் போலக் குறையுது. பெரிய மனசு பண்ணி ஏத்துக்கணும். மேடையிலே முழுத் தொகையாய் ஐயாயிரம்னு அறிவிச்சாலும், தவறாய் எடுத்துக்கக் கூடாது."

''பணம் ஒரு பெரிய விஷயமே இல்லை" என்று தியாகி சொன்னதும், அவரை வணங்கி எழுந்தார் தமிழ்மணி.

**வி**டைபெற்று, பள்ளிக்குத் திரும்பும்போது தமிழ்மணியின் மனமெங்கும் குதூகலம்.

'ஆயிரம் ரூபாய் லட்டு போலக் கிடைக்கப் போகிறது அடுத்த வாரம்' என்ற நினைப்பில், சினிமாப் பாடலை முணுமுணுத்தது அவர் வாய்.

பள்ளியின் தாளாளரின் ஏற்பாடு இது. தியாகிகளை அழைத்து, பண முடிப்புக் கொடுத்து கௌரவிப்பது வழக்கம். கடந்த ஐந்து வருடங்களாக இந்தப் பொறுப்பு தமிழ்மணியிடம் விடப்பட்டது. தமிழ் வாத்தியார் என்பதால் வந்த பொறுப்பு. தியாகிகளை அழைத்து வந்து, சுதந்திர தினவிழாவில் பேச வைத்து, அவர்களை மீண்டும் வீடு வரை, கொண்டு போய்ச் சேர்ப்பது தமிழ்மணியின் பொறுப்பு.



இங்குதான் தமிழ்மணியின் புத்தி கணக்குப் போட்டது.

வறுமையில் உழலும் தியாகிகளாய்ப் பார்த்துப் பிடிக்க வேண்டியது. பள்ளி நிர்வாகத்திடம் ஐயாயிரம் பெற்று, பண முடிப்பில் நாலாயிரத்தை வைத்துத் தந்துவிட வேண்டியது. மீதி ஆயிரம் ரூபாய் இவரது பாக்கெட்டுக்குள் அமுங்கிவிடும்.



"ஏம்பா ராமசாமி! நீ செல் போனில் பேசறது எங்கேயோ பள்ளத்தில் இருந்து பேசற மாதிரி இருக்கே!"

"மாதிரி இல்லை முதலாளி! உண்மையிலேயே லாரி ஆயிரம் அடி பள்ளத்தில் விழுந்து மாட்டிக்கிட்டுத்தான் பேசறேன்!"

- என்.சி. தர்மலிங்கம்

ஏழைத் தியாகி என்பதால், நாலாயிரத்துடன் திருப்திப் பட்டுக் கொள்வார். ஆயிரம் ரூபாய் பணம் குறைவதையும் பக்குவமாய் முன்பே சொல்லிவிடுவதால், இதுவரை எந்தப் பிரச்னையும் எழவில்லை.

ஆயிரம் ரூபாய்க்கு மனைவிக்கு சேலை, விடுமுறை நாளில் சினிமா, ஹோட்டல் என்று சுற்றி அசத்தி விடுவார், தம் குடும்ப அங்கத்தினர்களை.

**சு**தந்திர தின விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது பள்ளியில்.

தியாகி நமச்சிவாயம் தமது சுதந்திரப் போராட்ட நினைவுகளை துடிப்புடன் பேச, கூட்டம் சிலிர்த்துப் போனது.

விழா முடிந்து காரில் தியாகியை ஏற்றிக் கொண்டு புறப்பட்டார் தமிழ்மணி.

தியாகியின் வீட்டின் எதிரே கார் போய் நின்றது. தியாகியும், தமிழ்மணியும் வீட்டின் உள்ளே நுழைந்தனர்.

"ஐயா, உங்க பேச்சு பிரமாதம் இன்னிக்கு" என்று புகழ்ந்தார் தமிழ்மணி.

தியாகி தமிழ்மணியைக் கூர்ந்து பார்த்தபடி சொன்னார்.

"ஆனால் உங்க பேச்சு சுத்தமா யில்லையே வாத்தியாரே."

தமிழ்மணி திடுக்கிட்டுப் பார்த்தார். தியாகி கையிலிருந்த பணமுடிப்பை அருகிலிருந்த ஸ்டூலில் வைத்தார்.

கைகள் இரண்டையும் குறுக்கே கட்டிக் கொண்டு பண முடிப்பையும், தமிழ் மணியையும் மாறி, மாறிப் பார்த்தார். 'எப்படித் தெரிந்தது இவருக்கு' என்று விழித்தார் தமிழ்மணி. பள்ளித் தாளாளருடன் தியாகி தனியே சற்று நேரம் பேசியது நினைவுக்கு வந்தது வாத்தியாருக்கு.

"ஐயா, என்னை மன்னிச்சுடுங்க. பள்ளித் தாளாளர் ஐயாயிரம் ரூபாய் கொடுத்தது உண்மைதான். வீட்டுல அவசரச் செலவு. ஆயிரம் ரூபாய் எடுத்துச் செலவழிச்சுட்டேன். ஏழைத் தமிழ் வாத்தியார் நான். வாங்கற சம்பளம் கைக்கும், வாய்க்குமே போதலை" என்று காலில் விழுந்தார் தமிழ்மணி.

அவர் எழுந்து நிற்கும் வரை காத்திருந்த தியாகி, பண முடிப்பை அப்படியே எடுத்து, தமிழ்மணியிடம் தந்துவிட்டார்.

"தமிழ் வாத்தியாருங்களுக்கு சுய மரியாதை ஜாஸ்திம்பாங்க. எவ்வளவு பணக் கஷ்டம் இருந்தால், நீங்க உங்க சுயமரியாதையைக் கைவிட்டுட்டு பொய் சொல்லியிருப்பீங்க. எனக்கு ஏழ்மையும், கஷ்டமும் பழகிப் போச்சு. இந்தப் பணம் எல்லாமே உங்களுக்குத்தான். இதன் மூலமாய் உங்க தற்காலிகக் கஷ்டத்தைப் போக்கிக்கிட்டு, சந்தோஷமாய் இருங்க"

கூனிக் குறுகிப் போய் நின்றார் தமிழ்மணி. ●

# சப்புக் கொட்டற சத்தம்!



## காமராஜர்

பலரது கல்விக்கு வழிகாட்டிய 'ஹைபர்லிங்க்'ஆக விளங்கியவர் காமராஜர். அந்த கறுப்பு காந்திக்காக உருவாக்கப்பட்டுள்ள 'ஹைபர்லிங்க்' kamaraj.com அவரது வாழ்க்கை வரலாறு பத்து பகுதிகளாகக் கொடுக்கப்பட்டுள்ளன. பல அரிய புகைப்படங்கள் தொகுக்கப்பட்டுள்ளன. எல்லாவற்றையும்விட முக்கியமான விஷயம், பெருந்தலைவரின் பேச்சுகள் ஆடியோவாகக் கிடைக்கின்றன. நல்ல முயற்சி. இதேபோல் இத்தளத்தின் தமிழ் வடிவத்தையும் அமைக்க முயற்சி எடுக்கலாம். அவரது வரலாற்றை 'pdf' வடிவில் கொடுக்கலாம்.

## டௌன்லோட்

கூகுள் டெஸ்க்டாப் தேடலுக்குப் போட்டியாகக் களமிறங்கியுள்ளது answers.com தன் புதிய கருவியுடன்! www.answers.com/main/start_downloading.jspக்குச் சென்று '1 க்ளிக் ஆன்ஸர்ஸ்' என்ற கருவியை இலவசமாக டௌன்லோட் செய்து கொள்ளுங்கள். டெஸ்க்டாப்பில் அவர்கள் கொடுக்கும் பார் கிடைக்கும். இனி நீங்கள் ப்ரௌசரைத் திறக்கவே வேண்டாம். அந்த பாரில் உங்களுக்குத் தேவைப்படும் தகவலின் 'குறிப்பு' வார்த்தைகளைக் கொடுத்தாலே 'விக்கிபீடியா'வில் இருக்கும் தகவல்கள் கிடைத்துவிடும். கூகுள் அளவுக்கு இல்லாவிட்டாலும், செய்திகளைத் தேடுவதற்கு இது உதவும்.

## சுவை

சைவம், அசைவம், தஞ்சை, நெல்லை, மதுரை, கொங்கு, செட்டிநாடு, முகலாம், கிராமம், கேரளம், ஆந்திரா, கர்நாடகம், வட இந்தியா... இத்தனை வித சமையல்கள்! இனிப்பு, காரம், சிற்றுண்டி, பாயசம், சட்னி, கூட்டு, வறுவல், சூப், பொடி, ஊறுகாய், கேக், பிஸ்கட், ஐஸ் கிரீம், பழரசம் இப்படி பற்பல வகைகள்... எல்லாவற்றுக்கும் எளிய தமிழில் செய்முறை விளக்கம் கிடைக்கும் தளம் arusuvai.com. போனஸாக பல ஊர்களில் நடக்கும் சமையல் போட்டிகளின் விவரங்கள், அங்கே பரிசு பெற்ற பதார்த்தங்களின் செய்முறை விளக்கங்கள் என மணக்கிறது இந்தத் தளம். அவ்வப்போது சில குறிப்பிட்ட ஊர்களின் ஸ்பெஷல் ஐயிட்டங்கள் பற்றிய சிறப்புக் கட்டுரைகள் கிடைக்கின்றன. உதாரணம் : மதுரை அழகர் கோயில் தோசை. எந்தெந்த உணவு வகைகளை, எந்தெந்த வயதில், எவ்வளவு உட்கொள்ளலாம் என உடல் ஆரோக்கியத்துக்கு ஏற்ற பல டிப்ஸ்கள் செழிப்பாகக் கிடைக்கின்றன. இந்தத் தளத்தை மேயறப்போ மட்டும் மௌஸ்ல இருந்து 'க்ளிக்' சத்தம் வரமாட்டேங்குது, சப்புக் கொட்டற சத்தம் கேட்குது!

**- வலைஞன்**




வலைபாயுதே

# மனசை உயர்த்தி மனுஷனையும் உயர்த்தி!

**அ**து ஓர் ஊராட்சி ஒன்றிய நடுநிலைப் பள்ளி. திண்டுக்கல்லிலிருந்து ஆறு கி.மீ. தொலைவில் உள்ளது கோடாங்கி நாயக்கன்பட்டி கிராமம். ஆறு, ஏழு, எட்டு வகுப்புகளுக்கு விஞ்ஞானம் மற்றும் ஆங்கிலப் பாட ஆசிரியர் அவர். நாம் சென்றிருந்த சமயம் எட்டாம் வகுப்புக்கு



• ராபர்ட் கென்னடி தம் குடும்பத்தினருடன்...



கடல் வாழ் உயிரினம் பற்றிய விஞ்ஞானப் பாடம் நடத்திக் கொண்டிருந்தார். சுற்றுப்புறச் சூழல் குறித்து மாணவர்களுக்கு உணர்த்த வேண்டி, "சமீபத்தில் நமது நாட்டில் கடல் சார்ந்து ஒரு திட்டம் கொண்டு வந்ததில், சுற்றுப்புறச் சூழல் குறித்து பெரும் சர்ச்சை எழுந்தது. அது என்ன திட்டம்?" என்று வினவினார் ஆசிரியர்.

''சமுத்திர திட்டம்'' எனச் சில பிள்ளைகள் வாய்க்குள் முணுமுணுத்ததே தவிர, யாரும் சரியாகச் சொல்லவில்லை. "விக்ரம் கூட ஒரு சினிமாவில் பைத்தியமா நடிச்சிருப்பாரே!" என ஆசிரியர் சொன்னதுதான் தாமதம், எல்லோரிடமிருந்தும் கோரஸாக "சேது சமுத்திர திட்டம்!" என்று பதில் வந்தது. "பாருங்கள் சார், சினிமாவுலேந்து 'ஹின்ட்ஸ்' எடுத்துக் கெடுத்தாத்தான் இந்தக் காலப் புள்ளைங்களுக்கு பொது அறிவு சம்பந்தமா பதில் சொல்லத் தெரியுது!" என மிகவும் வருத்தத்துடன் பேசினார், ஆசிரியர் ராபர்ட் கென்னடி.

**வே**டசந்தூரிலிருந்து ஐந்து கி.மீ. தொலைவில் உள்ளது கல்கி வாசகர் ராபர்ட் கென்னடி வசித்து வரும் தேவநாயக்கன்பட்டி கிராமம். சுமார் முன்னூறு வீடுகளைக் கொண்டது. அதிலொரு ஓட்டு வில்லை வீடு. அந்த வீட்டுச் சுவரில், ராபர்ட் கென்னடியின் அப்பா எஸ்.எஸ்.ராமசாமி பிள்ளை புகைப்படமாகக் காட்சியளிக்கிறார். "சின்னோண்டு கிராமத்துல எம்புருஷன் டீக்கடை வெச்சிருந்தார்னுதான் பேரு. ஆனா மவனை நல்லாப் படிக்க வைக்கணும்னு படாதபாடு பட்டாரு. பணங் காசெல்லாம் செலவு பண்ணி என்னென்னமோ படிக்க வெச்சாரு!'' எனச் சொல்லியபடி, உள்ளேயிருந்து எழுந்து வந்தார் பெரியக்காள். ராபர்ட்



• வகுப்பறையில்....

கென்னடியின் அம்மா.

அவரைத் தொடர்ந்து ஒரு மெல்லிய தென்றல் போல தாழ்வாரத்தில் வந்து நின்றவர் ராபர்ட் கென்னடியின் திருமதி, ஆர்.அமராவதி. "ப்ளஸ் டூ வரைக்கும் வேடசந்தூர்ல படிச்சாரு. திண்டுக்கல் ஜி.டி.நாயுடு காலேஜ்ல பி.எஸ்சி. கெமிஸ்ட்ரி. அப்புறம் தபால் மூலமா மெட்ராஸ் யுனிவர்சிட்டியில் எம்.ஏ., போர்த்திற பாதுகாப்பு இயல். எம்.ஃபில் முடிச்சுட்டு பி.எட். இப்படி அவரோட படிப்புக்கே என்னோட மாமனாரு நெறைய்ய செலவு செஞ்சிருக்காரு. அப்புறம் இவருக்கு கலெக்டரா ஆகணும்னு ஒரு கனவு. 1986ல ஐ.ஏ.எஸ். நுழைவுத் தேர்வுல பாஸாகி, ஐ.ஏ.எஸ். பிரதானத் தேர்வுல ஃபெயிலாயிட்டாரு. அதுக்கப்புறமா தொடர்ந்து ஐ.ஏ.எஸ் எழுத வசதி இல்ல. 89ல சத்துணவு அமைப்பாளரா வேலைக்கு சேர்ந்துட்டார். சத்துணவுல வேலைக்கு வந்தப் புறம்தான், இந்த அமராவதியை இந்த அம்பிகாபதி தன்னோட பார்வை வலையில சிக்க வெச்சுட்டாரு" என்கிறார் ஆர். அமராவதி.

ஆர்.அமராவதியும் சத்துணவு அமைப்பாளராக வேலை பார்ப்பவரே.

'இந்தியன்' என்கிற சிறு பத்திரிகை ஒன்றையும் நண்பர்கள் சிலருடன் இணைந்து நடத்தி வந்திருக்கிறார் கென்னடி. ஐ.ஏ.எஸ். கனவு மாதிரியே, ஒருநல்ல பத்திரிகை நடத்த வேண்டும் என்கிற கனவும் நசுங்கிப் போய்விட்டது.

இரண்டு குழந்தைச் செல்வங்கள் அவர்களுக்கு. சிவராம பிரகாஷ் (வயது எட்டு) திலகவதி (வயது மூன்று)

"போக்குவரத்து வசதியே இல்லாத காலத்தில், 'நாலணா'வுக்கு கல்கி வெளிவந்த போதிலிருந்து தொடர்ந்து 'கல்கி' வாசித்தவர் என் அப்பா. 'கல்கி' மனசையும் உசத்தி, மனுஷனையும் உசத்தும் என்பார். அப்போது ஐம்பது அறுபது வீடுகளே அடங்கியிருந்த இந்த குக்கிராமத்தில், டீக்கடை வைத்து நடத்தியவர். பத்துப் பைசாவுக்கு டீ போட்டுத் தந்தவர். தன் வாழ்நாளின் கடைசி வரையில் டீக்கடை நடத்தி வந்தவர். அவர் இறந்து ஐந்து ஆண்டுகள் ஓடி விட்டன.

"நல்ல பத்திரிகையா கொடுங்கன்னு யார் கேட்டாலும், 'கல்கி'யை வாசிக்கக் கொடுத்தவர். இன்று எங்கள் வீடு தேடி நீங்கள் வந்திருக்கும் நேரத்தில், என் அப்பாவையும், 'கல்கி' வார இதழையும் இணைத்துப்பேசுவதைத் தவிர வேறொன்றும் தோன்றவில்லை எனக்கு!" என்று மனமுருகிப் பேசுகிறார் ராபர்ட் கென்னடி.

யார் யாருக்கு என்னென்ன பிடிக்கும்?

- ராபர்ட் கென்னடி - தலையங்கம், தராசு பதில்கள்
- அமராவதி - சிறுகதைகள், ராசி பலன்
- சிவராம பிரகாஷ் - நகைச்சுவைத் துணுக்குகள்.

கட்டுரை, படங்கள்:
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**



# குருபகவான் ஸ்தலமான ஆலங்குடியில் குருபெயர்ச்சி திருநாள் 19-9-2005 திங்கள் அன்று நடைபெறும் அன்னதான பணியிலும்,



# ஸ்வாமி கண்ணன் பட்டாச்சாரியா

## தலைமையில் சென்னையில் நடைபெறும்

# மாபெரும் குருபெயர்ச்சி ஹோமத்திலும்

## குடும்பத்துடன் நேரில் கலந்து கொள்ள அனைவரையும் அன்புடன் அழைக்கிறோம்.

பேரன்புடையீர்! வணக்கம். ஆலங்குடி குருபகவான் தங்களுக்கு அனைத்து நலன்களையும், வளங்களையும் தந்தருள பிரார்த்திக்கிறோம்.

ஆலங்குடியில் அமர்ந்து அருள் பாலித்துக் கொண்டிருக்கும் அருள்மிகு ஏலவார்குழலி உடனுறை ஆபத்சகாயர் அருளாசியோடும் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியான குருபகவான் திருவருளோடும் ஆலங்குடியில் கன்னி ராசியிலிருந்து துலாம் ராசிக்கு பிரவேசமாகும் குருபெயர்ச்சி நாளான 19-9-2005 திங்கள் அன்று நடைபெற இருக்கும் அன்னதானத்தில் கலந்து கொண்டு குருபகவானின் பேரருளை பெற அனைவரையும் அன்புடன் அழைக்கிறோம். கடந்த 7 ஆண்டுகளாக ஒவ்வொரு மாதமும் பௌர்ணமி நாளில் திருஅண்ணாமலையில் உள்ள சிவமடத்தில் அன்னதானம், ஹோமத் திருப்பணி செய்துவரும் "ஆன்மீகம் தெய்வீக மாத இதழ்" சார்பாக நடத்தப்படும் "ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்" மூலம் ஆலங்குடியில் சிறப்பு மூர்த்தியான ஸ்ரீ குருபகவான் கோயில் அருகிலுள்ள வடக்கு வீதியில் நடைபெறும் அன்னதான திருப்பணியில் குடும்பத்துடன் நேரில் கலந்து கொள்ள அன்புடன் அழைக்கிறோம்.

அன்னதானத்திற்கு தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.

- ரூ. 500 - அனுப்பும் அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் மூன்று மாதத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ. 1000 - அனுப்பும் அன்பர்களுக்கு, தாங்கள் விரும்பும் ஏதாவது ஒரு தெய்வீக மாத இதழ் ஆறு மாதத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ. 2000 - அனுப்பும் அன்பர்களுக்கு, தாங்கள் விரும்பும் ஏதாவது ஒரு தெய்வீக மாத இதழ் ஒரு வருடத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ. 5000 - அனுப்பும் அன்பர்களுக்கு, தாங்கள் விரும்பும் ஏதாவது ஒரு தெய்வீக மாத இதழ் ஐந்து வருடத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.

அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ.500, ரூ.1000, ரூ.2000, ரூ.5000 அனுப்பும் அன்பர்களுக்கு குருபெயர்ச்சி ஹோமத்தில் வைத்து பூஜிக்கப்பட்ட வெள்ளெருக்கு வேர் விநாயகரும், ஸ்ரீ காமாட்சியம்மன் விளக்கு மற்றும் ஸ்ரீ குருபகவான் வண்ணப்படமும் அனுப்பி வைக்கப்படும்.

## சென்னை மாநகரில் மாபெரும் குருபகவான் ப்ரீத்தி மகா ஹோமம்

குருபகவான் கன்னி ராசியிலிருந்து துலாம் ராசிக்கு பிரவேசிப்பதை முன்னிட்டு சென்னை திருவல்லிக்கேணி ஸ்ரீ யோக ஆஞ்சநேய சக்தி பீடாதிபதி விருட்ச சாஸ்திர வித்வான் பூஜ்ய ஸ்ரீ ஸ்வாமி கண்ணன் பட்டாச்சாரியா தமது வேத வித்வான்களின் குழுவுடன் குருபகவானால் ஏற்படும் சகலவித கிரக தோஷங்களுக்கு குருபகவான் ப்ரீத்தி மகா ஹோமத்தை 19-9-2005 குருபெயர்ச்சி அன்று காலை 6 மணிமுதல் 12 மணிவரை ஸ்ரீ யது கிரி ராஜமடம் 5, கிழக்கு குளக்கரை தெரு, திருவல்லிக்கேணி (ஸ்ரீ பார்த்தசாரதி கோயில் குளம் அருகில்) சென்னை-5-ல் நடத்துகிறார். இந்த மாபெரும் குருபெயர்ச்சி ஹோமத்தில் பங்குபெற விரும்பும் அன்பர்கள் தங்கள் நன்கொடைகளை அனுப்புவதோடு பெயர், நட்சத்திரம், ராசி, கோத்திரம் மற்றும் தங்களது பிரார்த்தனை போன்ற விவரங்களை தெளிவாக எழுதி அனுப்பினால் அதற்கேற்ப ஹோமமும் அன்னதானமும் செய்து அதற்கான பிரசாதங்கள் கூரியர் மூலம் அனுப்பி வைக்கப்படும். இம் மாபெரும் ஹோமத்தில் குடும்பத்துடன் நேரில் பங்கேற்று சங்கல்பமும், பரிகாரமும் செய்து கொண்டு பூர்ணாஹுதி வரை இருந்து பிரசாதம் பெற்றுக் கொள்ளலாம். நேரில் கலந்து கொள்பவர்களுக்கு அன்னதானம் வழங்கப்படும்.

## குருபெயர்ச்சி ஹோமத்தில் பங்கு பெற பரிகார சங்கல்ப கட்டணம் ரூ.400/-

இந்த மாபெரும் ஹோமத்தில் நேரில் கலந்து கொள்ள முடியாதவர்கள் தங்கள் பெயர், நட்சத்திரம், ராசி, கோத்திரம் போன்றவற்றை தெளிவாக எழுதி அனுப்பினால் அவர்கள் சார்பாக பரிகார சங்கல்பம் செய்து அதற்கான பிரசாதங்களுடன் ஹோமத்தில் வைத்து பூஜிக்கப்பட்ட குருபகவான் வெள்ளி டாலர், ஸ்ரீ குருபகவான் யந்திரம், காமாட்சியம்மன் விளக்கு, அட்சதை, குங்குமம், நவக்கிரக தோஷ ரட்சை மற்றும் ஹோம பஸ்பத்துடன் கூரியர் மூலம் தங்களுக்கு அனுப்பி வைக்கப்படும்.

[illegible]

அன்னதானம், ஹோமத்திற்கு தாங்கள் அனுப்பும் நன்கொடையை Sri Annapoorani Annadhana Seva Trust, Chennai-28 என்ற பெயரில் Cheque / D.D/ M.O. மூலம் கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பி தங்களை இப்புனித பணியில் ஈடுபடுத்திக்கொள்ளுங்கள்.



நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வரிவிலக்கு உண்டு

Cheque / D.D. / M.O. அனுப்ப வேண்டிய முகவரி:


## ஸ்ரீ அன்னபூரணி அன்னதான ஸேவா டிரஸ்ட்

SRI ANNAPOORANI ANNADHANA SEVA TRUST (Regd.)

4, APPAVOO GRAMANI 3rd STREET (Opp. Telephone Ex.), R.A.PURAM, CHENNAI - 28.

Tel : 044 - 2495 9302 Fax : 044 - 5206 8525 E-mail : Sivasiva@vsnl.net






# சந்ததி

கனிமொழி

## 4

உனக்கென எதைவிட்டுப்
போகிறேன் கண்ணே
நாங்கள் தலைமுறைகளாய்ச்
சுரண்டி
சக்கையாய்த் துப்பிய
பூமியை

குயில்களின் கானங்கள்
நெறிக்கப்பட்ட
மகரந்தமற்ற சோலைகளை

தூக்கி எறியப்படும்
துண்டு மாமிசங்களுக்காக
கூண்டுக்குள் கர்ஜிக்கும்
களைத்த சிங்கங்களை
பிடுங்கி நடப்படும்
மலட்டுக் காடுகளை

அடையாளங்களின் பெயரால்
வீசப்படும் வாட்களின்
நுனியில் பட்டு
சிதறிய சிறகுகளை

பேராண்மையின் குத்தீட்டிகளில்
செருகப்பட்டுள்ள
மண்டையோடுகளை

வீரத்தின் கரைகளில்
சரித்திரம் வீசியுள்ள
புதைக்கப்படாத பிணங்களை

கனவிலும் உன்னை
அச்சுறுத்தத் துடிக்கும்
ஆண்டவனின் ஏவுகணைகளை

கானலுமற்று விரியும்
இந்தப் பாலைவனங்களில்
திக்கற்றுத் திரியும்
மானுடத்தை

நீயேனும் எழுவாயா
எங்கள் சாம்பல்களில் இருந்து!

ஓவியம்: மருது

# முகமற்ற டிராகுலாவின் குரலற்ற குரல்!

'அமானுஷ்ய ஜெயசாமி' தமிழ் எழுத்துலகின் உள்ளீடற்ற படைப்பாளி. இலக்கியத்தின் இருப்பை ஆதாரமாக்கும் வெப்பக் கவிஞர். படைப்புகளின் நகர்வில் ஊர்ந்து செல்லும் தாக மேகம். பின் நவீனத்துவத்தின் நவீனப் பின்னல். 'ஓலைத்தகடு' சிற்றிதழின் ஆசிரியர். அவருடன், மீட்சிகளற்ற ஒரு பொழுதில் உரையாடியதிலிருந்து...

**நிருபர் :** வணக்கம். என் பெயர் தேஜேஸ்வரன்.

**அ.ஜெ.சா :** பெயர் என்பது அடையாளங்களைத் தொலைத்த சில எழுத்துக்களின் முகம் தொலைத்த கூட்டணி. தன்னை அறிவித்துக் கொள்ள வெறி கொண்டு அலையும் அகங்காரம் பிடித்தவர்களின் பிடிவாதமே முற்றிய நிலையில் நெறிகட்டி அறிவிக்கப்படுகிறது பெயரென! இப்போது சொல்லுங்கள் மனிதனுக்குப் பெயர் தேவையா? *(அறை அதிரும்படி சிரிக்கிறார்.)*

**நிருபர் :** தேவையே இல்லை. ஆக நீங்களும் உமது பெயரை எங்கேயும் உபயோகிப்பதில்லையா?

**அ.ஜெ.சா. :** உயிரற்ற கேள்வி. விஸ்தாரமான பாறைகளின் இடுக்கில் விதைகளை காகங்கள் ஒளித்து வைத்தாலும், தன்னை வெளிப்படுத்திக் கொள்ள தலை நீட்டும் தாவர சரீரம். இதயத்தின் நிழல் எங்கே விழும்? பிம்பங்களைச் சார்ந்திருத்தலின் வெளி நிலைக்கும், அவதானிப்புகள் வெட்டப்படும் பூரித்த நிலைக்கும் இடைப்பட்ட ஒரு அந்தர நிலையில் பெயர் என்பது கட்டாயமாக்கப்படுகிறது.

**நிருபர் :** மிக நன்றாகப் புரிகிறது. அடுத்த கேள்வி. தற்போது தாங்கள் எழுதும் இலக்கியத்தின் இலக்கு என்ன?

**அ.ஜெ.சா. :** கண்ணிவெடிகள் நிறைந்த நிலப்பரப்பில் நான் என் கால்களைத் தேடி நடந்து கொண்டிருக்கிறேன். இரகசியமாக ஊர்ந்து செல்லும் ஓநாய்கள் வாழும் காட்டில், என் ஒற்றைப் பேனா தீராத அபத்த நிலைகளின் ஊடாகக் குருதி தெளித்து இந்தப் பிரபஞ்சத்தைப் புனிதமாக்கிக் கொண்டுள்ளது. என் எழுத்துகளின் கற்பிதங்களால் தமிழ் இலக்கியம் வாழ்விக்கப்பட்டுக் கொண்டிருக்கிறது. *(வானத்தைப் பார்த்து ஊளையிடுகிறார்.)*

**நிருபர் :** ஆனால் உங்கள் படைப்புகளை 'கழிவுகளின் இழிநிலை' என பிரபல இலக்கியவாதி ரா.கூ.சே. கூறியிருக்கிறாரே! இதற்கு என்ன பதில் கூறுகிறீர்கள்?

**அ.ஜெ.சா :** *(ஆவேசமாக, தன் தலையைச் சிலுப்பிக் கொண்டு)* அது முகமற்ற ஒரு டிராகுலாவின் குரலற்ற குரல். பிணவறையின் உள் ஒளிந்து கொண்டு, தனக்குத் தானே ஒப்பாரி வைக்கும் நிழலற்ற காட்டேரியின் கதறல். என் ஆழ்ந்த புனைவுகளின் சூடு தாங்காமல், மரங்களற்ற காட்டினில் போய் தன்னைத்தானே புதைத்துக் கொண்ட ரத்த அணுக்கள் இல்லாதவனின் பிதற்றல். சடலங்களைப் பற்றி நான் பேசப் போவது இல்லை.

**நிருபர் :** 'பின் நவீனத்துவ'த்தால் வெகுஜன மக்களுக்கு என்ன பயன்?

**அ.ஜெ.சா :** இதற்கு எனது இந்தக் கவிதை பொத்தாம் பொதுவாக பதிலளிக்கும்.

"குப்பை லாரிகளின்
சத்தமற்ற நகர்விலும்
நாசிகளுக்கு அறிவிக்கப்படும்
பால்வெளி வாசனைகள்...
அண்மைக்கு அப்பால்
ஈயின் நிழலில் ஓய்வுறும்போது
எதிர்கொள்கிறது
சிகரெட்டின் தித்திப்பு!

**நிருபர் :** புரியலீங்களே!?

**அ.ஜெ.சா :** வாழ்வின் இருள்வெளிகள் புரிவதில்லை. (தன் முடி ஒன்றைப் பிடுங்கி,

காற்றில் பறக்க விடுகிறார்.)

திருபர் : 'கோண பீட' விருதுக்கு உங்கள் பெயர் பரிந்துரைக்கப்பட்டிருப்பதாகச் செய்திகள் கிளம்பியிருக்கின்றனவே?

அ.ஜெ.சா : எனக்கு விருது வழங்கும் தகுதி இங்கே எவனுக்கும் இல்லை. எனக்கு விருது வழங்க நினைப்பவன் தன்னைத் தானே ஒருமுறை நெருப்பால் எரிந்து தன் கற்பின் ஸ்திரத்தை நிரூபிக்கக் கூடியவனாக இருக்க வேண்டும். அப்படிப்பட்ட சமூக ஜீவி நான் மட்டுமே!

திருபர் : உங்களின் 'ஓலைத்தகடு' சிற்றிதழ் மொத்தம் எத்தனை பிரதிகளை எட்டியுள்ளது?

அ.ஜெ.சா : என் எழுத்துக்களின் வாசிப்பாளர்கள் என் அக்குளில் இருந்து கிளம்பியவர்கள். நான், என் நிழல், என் நிழலின் பிம்பங்கள், அந்த பிம்பங்களின் பிரதி பிம்பங்கள் என சந்தாதாரர்களின் எண்ணிக்கை நூற்றுக்கணக்காக தாண்டவமாடுகிறது.

திருபர் : உங்களை ஒரு புகைப்படம் எடுத்துக்கலாமா?

அ.ஜெ.சா : நான் பொதுவாக உதட்டுச் சாயம் பூச மாட்டேன். என் உதடுகளுக்கு கிளுகிளுப்பாக புன்னகை செய்யத் தெரியாது. எனக்கு அகண்ட கவர்ச்சியான உடலமைப்பு கிடையாது. இவற்றிற்கெல்லாம் ஒத்துழைக்கும் என் வீட்டு நாய்களை வேண்டுமென்றால் எடுத்துக் கொள்ளுங்கள். (கட்டப்பட்டிருந்த ஆளுயர நாய்களை அவிழ்த்து விடுகிறார்.)

உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு அ.ஜெ.சா.வின் வீட்டை விட்டு வெளியே ஓடிவரும் திருபர், அவசரமாக ஒரு ஆட்டோவில் ஏறி அமர்கிறார்.

ஆட்டோக்காரர் : எங்க சார் போகணும்?

திருபர் : வந்தேறிகளின் வியர்வை பொழியும் அத்துவானக்காட்டில், இறகுதிர்க்கும் ஒவ்வாமைக் குருவிகளின் கூட்டை நோக்கிப் போ!

(ஆட்டோ கீழ்பாக்கம் மருத்துவமனையை நோக்கி விரைகிறது.)

கற்பனை : **முகில்**



# சீரியஸா...



• செல்வி...

• சுந்தர் கே. விஜயன்

**த**மிழக மக்களை சீரியஸ், காமெடி, கிரைம் என்று மும்முனைத் தாக்குதலுக்கு ஆளாக்கி வருகின்றன தற்போதைய சீரியல்கள். ''ஏன் இப்படிப் பாடாய்ப் படுத்துகிறீர்கள்....? நீங்கள் செய்வதெல்லாம் நியாயமா... நீங்களே கலந்து பேசி ஒரு முடிவுக்கு வாருங்கள்'' என்றோம். உடனே ஒப்புக்கொண்டு கலந்துரையாட முன்வந்தனர். 'செல்வி'யின் இயக்குனர் சுந்தர் கே. விஜயன், காமெடி 'கிருஷ்ணா காட்டேஜ்' இயக்குனர் பிரபு நேபால், கிரைம் த்ரில்லர் 'காத்து கருப்பு'வின் கிரியேட்டிவ் இயக்குனர் ராம்ஜி. மூவரும் கல்கிக்கென பிரத்யேகமாக நேரம் ஒதுக்கி, பிரபு நேபால் அலுவலகத்தில் சந்தித்துக் கலந்துரையாடினர். முதல் யார்க்கரைப் போட்டவர் சுந்தர் கே. விஜயன்.

**சுந்தர் கே. விஜயன்:** *இப்போ ரொம்ப பாப்புலரா போயிட்டு இருக்கறது 'செல்வி' மாதிரியான சீரியஸ் டைப் சப்ஜெக்ட்ஸ் தான். அப்படி இருக்கறப்போ, நீங்க ரெண்டு பேரும் எந்த நம்பிக்கைல காமெடி, கிரைம்னு எடுத்துக்கிட்டீங்க... இது பெரிய ரிஸ்க் இல்லையா...?*

**ராம்ஜி:** *எல்லாருமே சீரியஸ் சப்ஜெக்ட்ஸ் தான் பார்க்கறாங்கன்னு சொல்ல முடியாது. நிறையப் பேர் இப்போ கிரைம் சீரியல்ஸையும் பார்க்க ஆரம்பிச்சருக்காங்க. ஏன்னா, எங்களோட கதைகளும் கட்டிப் போடும் வசீகரம் உள்ளவைதான். ஜனங்களை சும்மா அழவைக்காம, கதையில த்ரில்லர் எலிமெண்டையும் கலந்தா, மக்கள் பரபரப்பா பார்க்கிறாங்க. அதுக்கு சாட்சி இப்போ வந்திருக்கிற ஏகப்பட்ட த்ரில்லர் - கிரைம் சீரியல்ஸ்!*

**பிரபு நேபால்:** *சீரியஸையோ, த்ரில்லரையோ பார்க்கறவங்க பெரும்பாலும் பெரியவங்க தான்... ஆனா இன்னிக்கு குட்டீஸையும், யூத்தையும் யாருமே கண்டுக்கல... அவங்களுக்காகவே இந்த கிருஷ்ணா காட்டேஜ் மாதிரியான காமெடி சீரியல்ஸ் பண்ணிட்டு இருக்கோம்.*

**சுந்தர் கே.விஜயன்:** *ஆனா பிரபு... இந்த காமெடி சீரியல்ஸ்ல வர்ற ஜோக்ஸ் எதுவுமே மனசுல பதியவே மாட் டேங்குதே...*

**பிரபு நேபால்:** *அதுக்கு அவசியமே இல்ல! பார்த்தோமா... உடனே சிரிச்சோமா... அடுத்த வேலைக்குப் போனோமான்னு டிரெண்ட் போயிட்டு இருக்கு... அது மட்டுமில்லாம டெய்லி காமெடி சீரியல்ஸ்ல மனசுல பதியற அளவுக்குக் காமெடி பண்றது சிரமம்... எப்பவாவது தான் இப்படி அமையும்.*

**ராம்ஜி:** *இந்த சீரியஸ், காமெடி மூலமா மக்களுக்கு என்ன மெஸேஜ் தரமுடியும்னு நினைக்கறீங்க?*

**சுந்தர் கே. விஜயன்:**

...காத்து-கருப்பு...



...கிருஷ்ணா காட்டேஜ்...





• ராம்ஜி

• பிரபு நேபால்

கத்தை ஏற்படுத்தினா, அதுவே பெரிய விஷயம்... என்ன சொல்றீங்க பிரபு...?

# கிரைமா... காமெடியா?

மெசேஜ் தரணும்னு அவசியமே இல்ல ராம்ஜி. இப்போ ஜனங்க தினம் தினம் சீரியல்ல மறக்க முடியாத சம்பவம் இருக்கணும்னு எதிர்பார்க்கறாங்க... அதைப் பூர்த்தி செய்யவே நேரம் சரியா இருக்கு... அதையும் மீறி மெசேஜ் சொல்றதுக்காக கஷ்டப்பட்டு சீன் வைச்சோம்னு வச்சிக்கோங்க... "கொஞ்சம் இழுவையா இருந்துச்சல்ல... இந்த வாரம்"னு டாக் வந்துடும்... டி.ஆர்.பி. இறங்கிடுச்சும் பாங்க... ஸோ, என்னைக் கேட்டா, மெசேஜை விட சீரியல் மூலமா ஜனங்களுக்கு ஒரு பாசிட்டிவ்வான தாக்

**பிரபு நேபால்:** டீ.விங்கறது என்டர்டெய்னர்... அதனால இந்த சீரியல்ஸ் மூலமா ஜனங்களை சந்தோஷப்படுத்த முடியுமே தவிர, அதையும் தாண்டி மெசேஜ் எல்லாம் தர விருப்பமில்ல... அப்படி கருத்தும் தகவலும் வேணும்னா, அவங்க பி.பி.ஸி, என்.டி.டி.வி தான் பார்க்கணும். மத்தபடி சீரியல்ஸை வெறும் டைம் பாஸிங் டூலாத்தான் யூஸ் பண்ணணும். ஆனா ராம்ஜி இதைப்பத்தி கேள்வி கேட்டதோட சரி... இன்னும் பதிலே சொல்லல... ஒரு வேளை கிரைம் சப்ஜெக்ட்ல மெசேஜ் எதுவும் சொல்ல முடியாதோ...?

**ராம்ஜி:** யார் சொன்னது...? உங்களைவிட அதிக சான்ஸ் எங்களுக்குத்தான் இருக்கு. ஏன்னா எங்களுடைய கதைகள் எல்லாமே நிஜ சம்பவங்கள்... ஜனங்களுக்கு விழிப்புணர்ச்சி ஊட்டறமே! ஏன் சுந்தர்... அழ வைக்கறதை விட, வேற நல்ல டெக்னிக் உங்களைப் போல சீரியல் டைரக்டர்களுக்குத் தெரியாதா...?

**சுந்தர் கே.விஜயன்:** நீங்க சரியா சீரியல்ஸ்

பார்க்கறதில்லன்னு நினைக்கறேன்... சும்மா அழுதுக்கிட்டே இருக்குற பெண்கள் கேரக்டர்லாம் போயி, இப்போ சாதனைப் பெண்கள், புரட்சிப் பெண்கள் கேரக்டர்லாம் வந்தாச்சு... ஆனா நீங்க தான் வயலென்ஸ், வக்கிரம்னு இரண்டே டெக்னிக்கை யூஸ் பண்றீங்க...

**ராம்ஜி:** ஆமா... இந்த ரெண்டும் இல்லாத மனுஷங்க யாரையாவது காட்டுங்க பார்ப்போம்... நிஜத்தில் என்ன இருக்கோ, அதை மக்கள் கவனத்தை ஈர்க்கற மாதிரி சுவாரசியமா சொல்றோம். அவ்ளோதான்...

*(சட்டென்று இடைமறித்த பிரபு நேபால்)*

இப்போ டீ.விக்கும் சென்சார் போர்டு கொண்டு வரணும்னு ஒரு டாக் இருக்கு... அது தேவைன்னு நினைக்கறீங்களா சுந்தர்...?

**சுந்தர் கே. விஜயன்:** அவசியமே இல்ல.... இப்போ 'மன்மதராசா...'ன்னு ஒரு பாட்டு ஹிட் ஆகியிருக்கு... அதுல வராத வார்த்தைகளே இல்ல. அந்த பாட்டை ரசிக்கற அதே ஆடியன்ஸ், அந்தப் பாட்டை ஏன் சீரியல்ல வர கேரக்டர் கேட்கற மாதிரி சீன் வைச்சா உடனே முகம் சுளிச்சுடறாங்க... ஸோ, எதை சினிமால பார்க்கணும்... எதை டீ.வில பார்க்கணும்னு தெளிவா இருக்காங்க...

அது மட்டுமில்லாம, சென்சார் கொண்டு வர்ற அளவுக்கு டீ.வில எதுவும் எல்லை மீறிப் போயிடல... எல்லாமே கட்டுக் கோப்பாத்தான் இருக்கு.

**ராம்ஜி:** யு ஆர் ரைட் சுந்தர்... ஜனங்களை விடப் பெரிய சென்சார் போர்டு எதுவும் இல்லங்கறது தான் என் கருத்து... அதுமட்டுமில்லாம, மெகா சீரியல் புரட்சி நடந்துட்டு இருக்குற இந்தச் சூழ்நிலைல, சென்சார் நடைமுறை சாத்தியமில்லாத ஒண்ணு.

**பிரபு நேபால்:** நம்ம எல்லாருக்குமே ஒரு குடும்பம் இருக்கு... நம்மளோட புராடக்டை நம்ம குழந்தைங்க, குடும்பத்தைச் சேர்ந்தவங்க பார்க்கற மாதிரி தயார் பண்ணணும். நம்ம குழந்தை பார்க்க விரும்பாத எதையும் நாம ஜனங்களுக்குத் தரப்போறதில்ல... அந்தப் பொறுப்பு நமக்கே இருக்கு.

**ராம்ஜி:** நம்ம சீரியலை மிகப்பெரிய டைம் கில்லர்ஸ்னு சொல்றாங்க. இந்த குற்றச்சாட்டை உங்களால மறுக்க முடியுமா...?

**சுந்தர் கே. விஜயன்:** நிச்சயமா... இப்ப, காசு செலவில்லாம பொழுது போக்கறதுக்கு டீ.வி இல்லன்னா, மக்களுக்கு போரடிச்சுடும்.

**பிரபு நேபால் :** ஆனா இதுல எனக்கு உடன்பாடு இல்ல சுந்தர். ஒரு பொறுப்புள்ள தந்தையா யோசிச்சா, டீ.வி, சீரியல்ஸ் எல்லாமே நேரத்தை வீணடிப்பவை தான். குழந்தைங்க படிப்பு வீணாகுது. பெரியவங்க யாரும் ஒருத்தருக்கொருத்தர் மனம் விட்டுப் பேசிக்கறதில்ல... ஒரு தயாரிப்பாளரா பார்த்தா...

*(மூவருமே சிரிக்க ஆரம்பிக்கின்றனர்)*




**- இரா.முத்துக்குமார்**

படங்கள்: **ராஜன்**



# அரைச்ச மாவு அதே கிரைண்டர்!

**ஒவ்வொரு சினிமாவிலும் கண்டிப்பாக இடம் பெறும் சில புளித்த காட்சிகளும் ஊசிப்போன வசனங்களும்...**

* "இன்னும் ஒரு அஞ்சு நிமிஷம் லேட்டா வந்திருந்தாக் கூட காப் பாத்தியிருக்க முடியாது" என்பார் டாக்டர்.

* "சரியா ஒரு மணி நேரத்துல டயம் பாம் வெடிக்கும். நீ குடும்பத் தோட பீஸ் பீஸாயிடுவே" என்பான் வில்லன்.

* ஹீரோவின் தாய் - தந்தை



சேர்ந்தே இருக்க மாட்டார்கள்.

* திருவிழா என்றால் குழந்தை காணாமல் போய் விட வேண்டும், தொடையிலோ, முதுகிலோ திரிசூல மச்சத் துடன்.

* எப்போது வேண்டுமானாலும் தீபாவளி, ஹோலி, பிறந்த நாள் வரலாம்.

* க்ளைமாக்ஸில் ஹீரோ - ஹீரோயின் மாறு வேடத்தில் டான்ஸ் ஆட, மக்கு வில்லன் கோஷ்டி களுக்கு மாத்திரம் தெரியவே தெரியாது.

* சுனாமியில் சிக்கி உயிருக்குப் போராடும் சீனில் கூட, ஹீரோயின் லிப்ஸ்டிக் மஸ்காராவுடன் தான் வந்து வதைப்பார்.

* வில்லன் புரட்டிப் புரட்டி அடித்து புல்டோஸரே ஏத்தினாலும் சவடாலாகத் தாங்கி நிற்கும் ஹீரோ, ஒரு சின்ன சிராய்ப்புக்கு ஹீரோயின் தன் தாவணியால் ஒற்றி எடுக்கும்போது மட்டும் எஸ்.ஜானகி ரேஞ்சில் வலியில் முனகுவார்.



* முதல் சீனிலேயே ஹீரோவுக்கு திருமணம் ஆகியிருந்தால், அநேக மாக அந்த ஹீரோயின் கோயிலுக்குப் போய்விட்டு வரும் வழியில் வில்லனின் குண்டுக்கு இரையாகி விடு வாள்.

* பொல்லாத மனைவியை கடைசி சீனில் தான் பெல்டி னால் விளாசுவார் அப்பாவிக் கணவர்!

* காலேஜ் காட்சிகளில் எப்போதும் லைலா - மஜ்னு, ரோமியோ ஜூலியட் என்று காதல் கதைகள்தான் பாடங் களாக இருக்கும்.

* டீச்சர், கலெக்டர் ரோல் என்றால், நாயகி கண்டிப்பாக மூக்குக் கண்ணாடி போடுவாள்!

- லதா சேகர்

ஏவி.எம். நிறுவனத்துக்கு 1997ம் ஆண்டு பொன்விழா ஆண்டு. அப்போது நாங்கள் சின்னத்திரை சீரியல்களில் கவனம் செலுத்திக் கொண்டிருந்ததால், வெள்ளித் திரை படம் பண்ண வேண்டும் என்ற எண்ணம் உண்மையில் இல்லை. பம்பாயில் நடைபெற்ற ஒரு விழாதான், எங்கள் பொன் விழா ஆண்டை முன்னிட்டு நிச்சயமாகப் படம் எடுக்க வேண்டும் என்ற உறுதியான எண்ணத்தை எங்களுக்கு ஏற் படுத்தியது.

பம்பாயில் ஃபிலிம் சிட்டி, இந்திய சினிமாவின் நூற்றாண்டு விழாவை சிறப்பாகக் கொண்டாடியது.

இந்தியத் திரையுலகில் புகழ்பெற்ற குடும்பங்கள் மேடையில் கௌரவிக்கப்பட்டன. இந்த வகையில் நம் நாட்டில் சீனியர்கள் என்றால், அது தாராசந்த் பர்ஜாட்டியா குடும்பம் எனலாம். அந்த விழாவில் அவரும் அவரது மகன் கமல் பர்ஜாட்டியாவும் கலந்து கொண்டார்கள். மேடையில் ஒவ்வொரு குடும்பத்தையும் அழைத்து அறிமுகப்படுத்தினார்கள். ராஜ்கபூர் குடும்பம் போன்று திரையுலகில் முத்திரை பதித்தவர்களெல்லாம் அங்கு அறிமுகப்படுத்தப்பட்டார்கள். அந்த வகையில் கமல் பர்ஜாட்டியா அறிமுகப்படுத்தப்பட்டார். அவர் மேடையில் பேசி முடித்தபோது "எங்களை விட சீனியர் ஃபேமிலி ஒன்று இங்கே வந்திருக்கிறது. அது ஏவி.எம். ஃபேமிலி. அதற்குப் பொறுப்பு வகித்துக் கொண்டிருக்கும் சரவணன், திரைப்படத் தயாரிப்பாளர்கள் சங்கத் தலைவராகவும், சர்வதேச திரைப்படத் தயாரிப்பாளர்கள் சங்கத் துணைத் தலைவராகவும் பதவி வகிக்கிறார். அவரும், அவரது சகோதரர் பாலுவும், மகன் குகனும் வருகை தந்திருக்கிறார்கள். அவர்களை நான் மகிழ்ச்சியுடன் அறிமுகப்படுத்துகிறேன்" என்றார். நாங்கள் மூவரும் மேடைக்குச் சென்று அரங்கத்திலிருந்தவர்களின் வாழ்த்துகளைப் பெற்றபோது, 'இந்தப் பொன்விழாவைக் குறிக்கும் வகையில் ஒரு திரைப்படம் எடுக்க வேண்டாமா?' என்று சிந்தித்தேன். பின்னர் நாங்கள் மூவரும் இதுபற்றிப் பேசினோம்.


• 'திருப்பதி' படப் பூஜையில்...




சென்னைக்கு வந்த பிறகு பல நண்பர்கள் 'ஏன் படம் எடுக்காமல் இருக்கிறீர்கள்?' என்று கேட்டுக் கொண்டே

# ஏவி.எம்–167!

இருந்தார்கள்.

பம்பாயில் எனக்கு ஏற்பட்ட எண்ணத்தை ஆல்பட் மாரியப்பன், பாரதி கண்ணன் போன்ற நண்பர்களின் வற்புறுத்தல் மேலும் உறுதியாக்கியது. என்ன படம் எடுப்பது என்று ஆலோசித்தபோது, ''பிரபு தேவாவை 'புக்' பண்ணுங்க?'' என்று மாரியப்பன் ஐடியா கொடுத்தார்.

பிரபுதேவாவை ஒப்பந்தம் செய்தோம்.

பிறகு நண்பர் ராஜீவ் மேனன் மூலமாக ஏ.ஆர்.ரஹ்மானை இசையமைக்கக் கேட்டிருந்தோம். ஆனால் ரஹ்மான் அவ்வளவாக ஆர்வம் காட்டவில்லை.

''மாடர்ன் அவுட்லுக் இருக்கிற இயக்குனராக இருக்க வேண்டும்'' என்று விரும்பினார் ரஹ்மான்.

எனக்கு ஓர் எண்ணம் தோன்றியது. ராஜீவ் மேனனை அழைத்தேன். ''நீங்க முப்பது வினாடிகளில் அருமையா கதை சொல்றீங்க. நீங்களே ஏன் முழுப் படமும் பண்ணக் கூடாது?'' என்று உரிமையுடன் கேட்டேன். முதலில் மறுத்த ராஜீவ்மேனன், பிறகு ஒப்புக் கொண்டார். ''நீ படம் டைரக்ட் பண்றதாயிருந்தா நான் மியூஸிக் பண்றேன்'' என்றார் ரஹ்மான்.

அதன் பின்னர் அரவிந்த் சாமி, கஜோல் என்று பல கலைஞர்களையும் ஒப்பந்தம் செய்தோம்.

படத்தயாரிப்பு வேலைகள் தொடங்க இருந்த சமயத்தில், ராஜீவ்மேனன் என்னிடம், ''ஒரு கண்டிஷன்'' என்றார்.

"என்ன?" என்று கேட்டேன்.

• உஷா சரவணன்(மகள்) நித்யா குகன் (மருமகள்)
எம்.எஸ்.குகன் (மகன்)
முத்துலக்ஷ்மி சரவணன் (மனைவி)
ஏவி.எம்.ராஜேஸ்வரி அம்மாள்(தாயார்) எம்.சரவணன்,
அருணா குகன், அபர்ணா குகன்(பேத்திகள்)
சித்தார்த் சரவணன்(பேரன்)



ஏவி.எம்.சரவணன்

"நீங்க கொஞ்சம் ஓல்ட் டைமர். நீங்க என் வொர்க்ல தலையிடாம இருந்தா நான் பண்றேன். எனக்குக் கொஞ்சம் கூட குறுக்கிடு இருக்கக் கூடாது. முழு சுதந்திரம் வேண்டும்"

ராஜீவ் மேனனின் கண்டிஷனை முழுமையாக ஏற்றுக் கொண்டேன். தலையிடவே இல்லை. அந்தப் படம் தான் 'மின்சாரக் கனவு!'




• 'பேரழகன்' படத்தில்...

என் தம்பி பாலுவின் மகள் லட்சுமி பிரியா சிங்கப்பூரில் காஸ்ட்டியூம் டிசைன் கற்றுக் கொண்டு திரும்பி யிருந்தாள். அவள் மின்சாரக் கனவின் காஸ்ட்யூம் டிசைனராகப் பொறுப் பேற்று நன்றாகச் செய்தாள்.

படம் முழுக்க முழுக்கத் தயாரிப் பைப் பார்த்துக் கொண்டது என் மகன் குகன்தான். அந்தப் படம் சம்பந்தப்பட் டவர்கள் அனைவருமே நாற்பது வயதுக்குட்பட்டவர்கள்தான். 'ஏவி.எம். புரொடக்ஷன்ஸ் ஃபிப்டி இயர்ஸ் யங்' என்று ராஜீவ்மேனன் அப்போது சொல்லிக் கொண்டிருந்தார். அப்படி ஒரு யூத் பிக்சராக மின்சாரக் கனவை எடுத்தோம்.

படம் எழுபத்தைந்து முதல் நூறு நாள் போகும் என்று நினைத்தோம். அதற்கும் மேலே போனால் நன்றாக இருக்குமே என்ற எண்ணத்தில், கவிஞர் வைரமுத்துவைக் கூட்டிக் கொண்டு சன் டீ.வி அதிபர் கலாநிதியைப் பார்க்கச் சென்றோம். "நீங்கள் எங்களுக்கு ஒத்துழைப்புக் கொடுத்தால் வெள்ளி விழா வெற்றியாக எங்களால் மாற்றிக் காட்ட முடியும்" என்றோம்.

கலாநிதி மாறனுக்கு நம்பிக்கை யில்லை. ''இப்படிக்கூட செய்ய முடியுமா?" என்று கேட்டார்.

எங்கள் நம்பிக்கையை மதித்து, சம்பந்தப்பட்டவர்களை ஒரு குழுவாக அழைத்து, ''இவர்களுக்கு என்ன தேவையோ அதைச் செய்து கொடுங்கள்" என்று சொல்லி எங்களுக்கு உறு துணையாக இருந்தார்.

விளம்பர யுக்திகள் வேக மாக உருவாயின. 'மின்சாரக் கனவு' படத்திலிருந்து சில கேள்விகளுக்கு ரசிகர்கள் பதில் சொல்வது, த்ரீ ரோஸஸ் நிறுவனத்துடன் இணைந்து 'மின்சாரக் கனவு சிறப்பு ரயில்' விடுவது போன்றவையெல் லாம் அப்போது உருவான ஐடியாக்கள்தாம்.

நாங்கள் இந்த விளம்பரங்களைத் தொடங்கியதுமே சூடு பிடித்தது. மின் சாரக் கனவு 'வெள்ளி விழா' கண்டது. சன் டீ.விக்கும், ஏவி.எம். நிறுவனத்துக் கும் ஓர் இனிய உறவு ஏற்பட்டது.

மின்சாரக் கனவு படத்துக்கு நான்கு தேசிய விருதுகள் கிடைத்தன. சிறந்த இசையமைப்பாளர் விருது (ஏ.ஆர். ரஹ்மான்), சிறந்த பின்னணிப் பாடகர் விருது (எஸ்.பி.பி.- 'தங்கத் தாமரை மகளே' என்ற பாடல்), சிறந்த நடன அமைப்புக்கான விருது (பிரபுதேவா), சிறந்த பின்னணிப்பாடகிக்கான விருது (சித்ரா), ரொம்பவும் மகிழ்ச்சியாக இருந்தது.

'ஜெமினி' படத்தை 2002ல் எடுத்தோம். படம் வெளி வந்ததும் 'ஓ போடு' பாடாத குழந்தைகளே இல்லை என்ற அளவுக்கு அந்தப் பாட்டு பாப்புலராகிவிட்டது. குழந்தைகளுக்குப் போட்டிகள் வைத்து, வெற்றி பெற்ற வர்களுக்கு ஒரு ஸ்பெஷல் அலாரம்

டைம் பீஸ் பரிசளித்தோம். பிரத்யேகமாக வடிவமைக்கப்பட்ட அந்தக் கடிகாரத்தில், அலாரம் அடிக்கும்போது 'ஓ போடு' என்ற வார்த்தைகள் கேட்கும்.

விக்ரம் ரொம்பவும் ஜாலியாக நடித்திருந்தார். கலாபவன் மணியை அவர்தான் எங்களுக்குச் சிபாரிசு செய்தார்.

'காசி' மலையாளப் படத்தில் கலாபவன் நன்றாகச் செய்திருந்ததாகச் சொன்னார். ஜெமினியில் தமது மிமிக்ரி திறமைகளை வெளிப்படுத்தும் நல்ல ரோல் அவருக்கு.

'ஜெமினி' படம் பல ஆண்டுகளுக்குப் பிறகு ரசிகர்களை படம் பார்க்க தியேட்டருக்கு அழைத்து வந்தது. அது எங்களுக்குப் பெரிய வெற்றி.

ஜெமினி படத்தை வாங்கிய விநியோகஸ்தர்கள் பெரும் லாபம் கண்டு மகிழ்ந்தார்கள். அதைவிட எங்களுக்கு வேறென்ன மகிழ்ச்சி இருக்க முடியும்?

**ம**லையாளத்தில் வெற்றிபெற்ற படம் 'குஞ்சுக் கோனன்'. கதை எங்களுக்குப் பிடித்திருந்தது. அதை தமிழில் எடுக்க உரிமை வாங்கினோம். சூர்யாவுக்கும் மிகவும் பிடித்திருந்ததால் உடனே கால்ஷீட் தந்தார். மலையாளத்தில் இரண்டு பேர் தனித்தனியாக நடித்த கேரக்டர்களை, தமிழில் ஜோதிகா ஒருவரே செய்தார். மலையாளப் படத்தை இயக்கிய சுசி சங்கரே 'பேரழக'னையும் இயக்கினார்.



• 'மின்சாரக் கனவு' படத்தில்...

சூர்யாவின் கூனன் நடிப்பு 'எக்ஸ்ட்ரா ஆர்டினரி பர்ஃபாமென்ஸ்' என்று பாராட்டும்படி அமைந்தது.

'ஒவ்வொரு ஃபிரேமிலும் தன்னை முழுக்க முழுக்க ஈடுபடுத்திக் கொண்டு மிகப் பிரமாதமாகச் செய்கிறார்' என்று படப்பிடிப்புத் தளத்திலிருந்து தினமும் எனக்குத் தகவல் கிடைக்கும்.

சூர்யாவின் நடிப்பை மீடியா புகழ்ந்து பாராட்டியது.

**'பே**ரழகன்' படத்துக்குப் பின்?

ஏவி.எம். நிறுவனத்துக்கு இது வைரவிழா ஆண்டு. அதைக் குறிக்கும் வகையில் ஒரு படம் எடுக்காவிட்டால் எப்படி? இதோ முடிவு செஞ்சாச்சு! டிசம்பர் மாதம் ஆரம்பித்து 2006 தமிழ்ப் புத்தாண்டு அன்று வெளியாகிறது. அஜீத் நடிக்க, பேரரசு இயக்கும், ஏவி.எம்மின் 167வது படம் 'திருப்பதி'.

தரமான விருந்துக்குக் காத்திருங்க!



• ஓ போடு...

(நிறைந்தது)

தொகுப்பு: **ராணிமைந்தன்**

# பத்துலட்ச ரூபா

கோடம்பாக்கத்தில் போய் நின்று "ஒரு டூயட் என்ன விலை?" என்று கேட்டுப்பாருங்கள். இருபது லட்சம் என்று ரோட்டில் செல்பவர் கூட பட்ஜெட் பகர்வார். இதையே இயக்குனர் செல்வபாரதியிடம் கேட்டுப்பாருங்கள், "பத்து லட்சம்" என்பார். பாதி விலையில் ஒரு டூயட்டா? "அட! ஆமாங்க, இருக்கவே இருக்கிறது இலங்கை. அங்கே படப்பிடிப்புக் கட்டணம் கிடையாது. படப்பிடிப்பு நடத்த நாற்பத்தெட்டு மணி நேரத்தில் அனுமதி கிடைத்து விடுகிறது. அப்புறமென்ன? சென்னையில் பத்து லட்சம் செலவு செய்து 'செட்' போடத் தேவையில்லை. 'இராணுவ முகாம்களில் கூட படப்பிடிப்பு நடத்திக் கொள்ளுங்கள்' என்கிறார்கள்" என்று தடாலடியாக திகிலூட்டுகிறார் 'அன்பே வா' படத்தின் டூயட் உட்பட, பல பாடல்களை இலங்கையில் படம்பிடித்துத் திரும்பியிருக்கும் கே. செல்வபாரதி.

எம்.ஜி.ஆர் நடித்து ஏவி.எம். தயாரிப்பில் வெளியான 'அன்பே வா' படத் தலைப்புக்கு ஏகப் போட்டி. (படம் வெளிவந்து பத்து ஆண்டுகள் ஆகிவிட்டால் புதிய படங்களுக்குப் பயன் படுத்தலாம்) தலைப்பைத் தட்டிக் கொண்டு வந்த இயக்குனர், இந்தப் படத்தில் தென்றல் என்ற அறிமுக ஹீரோவோடு களத்தில் குதித்திருக்கிறார்.

கல்யாணமாகி ஆறே நாட்களில் பிரிந்து விடும் புதுமணத் தம்பதிகள், ப
பவங்களைக் கேட்டு ஒன்று ே
ஏழு பாடல்களை சூக் பண்
கொழுசே! கால் கொலுே
படமாக்க ஹீரோ, ஹீரோ
பதிவாளர், இரண்டு உத
பத்துப் பேர் இலங்கைக்
அங்கே கொழும்பு கடற்க
ஐந்து காஸ்ட்யூம் சேஞ்ச்
திட்டமிட்ட தொகையிலே
தங்கி, இலங்கையின் புரா
உண்டுரா பகுதிகளில் மீதி
திரும்பி விட்டார்களாம்.

"ஒரே பிரச்னை என்
வெட்கப்பட்ட ஹீரோவை
வருவதற்கே ஒரு நாள் ஆ
ஸ்ரீதேவிகா.

அறிமுக ஹீரோ ெ
கே.ஏ.கேயின் தங்கை ம

• தேடி...



• ஓடி...



# ...ில் காதல் கொலுசு!

...ரிவிழா தம்பதியின் அனு
...நம் கதை. டி.இமான் மொத்தம்
...)க் கொடுத்திருக்கிறார். 'கால்
... என்றொரு டூயட். இதைப்
...ன், நடன இயக்குனர், ஒளிப்
...ாளர்கள் உட்பட, மொத்தம்
... பயணப்பட்டிருக்கிறார்கள்.
...யில் மூன்று நாள் படப்பிடிப்பு,
...முடிந்தது கதை. டூயட்டுக்குத்
... மொத்தம் பதினெட்டு நாட்கள்
... இடங்களான சிக்ரியா மலை,
...பாடல்களையும் படம் பிடித்துத்

...என்றால், டூயட் காட்சிகளில்
ரொமான்டிக் மூடுக்குக் கொண்டு
விட்டது" என்கிறார் ஹீரோயின்

...ன்றல், முன்னாள் அமைச்சர்
... என்று கேள்வி!

- ஸ்ரீசக்கரம்

* பாடி...





# அருள்வாக்கு



வரதக்ஷிணைப் பழக்கமும், கல்யாணங்களை டாம்பீகமாக நடத்துகிற வழக்கமும் தொலைய வேண்டும். பெயருக்கும் புகழுக்கும் ஆசைப்பட்டு தான தர்மங்கள் செய்வதை விட, பணக்காரர்கள் தங்கள் ஏழை பந்துக்களின் விவாகத்துக்குத் தாராளமான திரவிய உதவி தர வேண்டும். உரிய காலத்தில் நம் பெண் குழந்தைகளுக்குக் கல்யாணமாகி ஸ்திரீ தர்மமும், சமூக தர்மமும் கெடாமலிருக்க வேண்டும் என்பது என் ஆசை. ஸ்திரீகள்தான் தர்மத்தை வளர்க்கிற தீபங்களாக இருக்கிறார்கள். அவர்களின் பண்பு கெடுகிறதற்கு இடமே தரக்கூடாது. அப்புறம் தேசம் பிழைக்காது. குலஸ்திரீகளின் சித்தம் கெட்டுப் போய்விட்டதானால், அப்புறம் தருமமே போய்விடும், தேசமே போய்விடும் என்றுதான் அர்ஜுனன்கூட பகவானிடம் அழுதான். நம் ஸ்திரீ தர்மத்தைக் காப்பாற்றுகிற பெரிய கடமையில் நாம் தவறிவிடக் கூடாது. பெண்கள் காலத்தில் கல்யாணமாகி கிருஹலக்ஷ்மிகளாக இருக்க வேண்டியது சமூக க்ஷேமத்துக்கு ரொம்பவும் அவசியம். இதற்கு ஒரு பெரிய முட்டுக்கட்டையாக இருக்கிற வரதக்ஷிணை வழக்கத்தை நாம் கைவிட்டேயாக வேண்டும்.

உங்களை இப்படிச் செய்யப் பண்ணுவதற்கு எனக்கு எந்த அதிகார சக்தியும் இல்லை. என்னால் முடிந்தது, ஒரு ஆயுதப் பிரயோகம் பண்ணுகிறேன்; இப்போது ரொம்பப் பேர் கல்யாணப் பத்திரிகைகளில், "ஆசார்ய ஸ்வாமிகள் அனுக்கிரகத்தோடு நிச்சயிக்கப்பட்டிருப்பதாகப்" போடுகிறீர்கள் அல்லவா? இனிமேல் வரதக்ஷிணை வாங்குகிறவர்களும் கொடுக்கிறவர்களும், அப்படிப்பட்ட கலியாணப் பத்திரிகைகளில் என் அனுக்கிரகத்தோடு நிச்சயித்ததாகப் போடவேண்டாம்!

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சார்ய சுவாமிகள்**

# 4 உள்ளங்கையில் உலகம்

## இரண்டாம் பாகம்

கஜானன் வேலையில்லாத பையன். சாகசமான பையன். பத்து வருடங்களுக்கு முன் எங்களுடன் வேலை பார்த்தான். அவனை 'கனு' என்று அழைப்போம்.

ஒரு நாள் என்ன தோன்றியதோ அவனுக்கு, "அம்மா, எனக்கு பெங்களூர் பிடிக்கவே இல்லை. பீன்யாவிலிருந்து இங்கே நம் ஆபீசுக்கு வந்து, சிறிய சம்பளத்தில் வேலை பார்ப்பது கஷ்டமாக இருக்கிறது. ஊரில் சொந்த வீடும் கொஞ்சம் நிலமும் இருக்கிறது. அங்கே போகிறேன்'' என்றான்.

அவனை வாழ்த்தினேன். "எங்களை மறந்து விடாதே!" என்றேன்.

அவ்வப்போது கனு வருவான். அவனுடைய முன்னேற்றம் குறித்துச் சொல்லுவான். கிராமத்தில் வசதியாக இருந்தான். திருமணம் செய்து கொண்டான். வயல் வேலை போக, சிறிய அளவில் சமூக சேவையும் மேற்கொண்டான். எங்களிடமிருந்து புத்தகங்களும், கம்ப்யூட்டர்களும் எடுத்துக்கொண்டு போய், கிராமப் பள்ளிக்கூடத்தில் கொடுத்து ஒரு விழா நடத்தி, போட்டோக்களை அனுப்பி வைத்தான். "ஆகா, ஒரு கிராம சமூகத் தலைவர் ஆகிவிட்டானே கனு!" என்று மகிழ்ந்தோம்.



**"அப்போது நீங்கள் புரிந்து கொள்வீர்கள், எனக்கு எத்தனை சிநேகிதர்கள் என்று!"**

ஒரு நாள் கவலையோடு வந்தான் கனு. "அம்மா, பத்தாயிரம் ரூபாய் தர முடியுமா? காய்கறித் தோட்டத்துக்கு விதைகள் வாங்க வேண்டும். பணம் கொஞ்சம் குறைகிறது. மூன்று மாதத்துக்குள் கொடுத்து விடுகிறேன்!'' என்றான்.

# ஒரு சொட்டுக் கண்ணீர்!

கனு அதுவரை பணம் கேட்டதே இல்லை. யாரையும் ஏமாற்றியதும் இல்லை. எனவே கேட்ட ரூபாயைக் கொடுத்தேன்.

மூன்று மாதங்களுக்குப் பிறகு, சொன்னபடியே கனு ஒரு கூடை கறிகாய்களுடன் வந்து, ரூபாயையும் திருப்பிக் கொடுத்தான்.

பிறகு இதுபோல ஒரு தொகை வாங்கிக் கொண்டு போவதும், அதைத் திருப்பிக் கொடுப்பதும் வாடிக்கை ஆயிற்று.

அடுத்த முறை கனு ஒரு லட்ச ரூபாய் கேட்டான்.

"கனு, லட்ச ரூபாய் என்பது பெரிய தொகை. என்ன செய்யப் போகிறாய் நீ?"

"அம்மா, இதற்கு நிறையப் பணம் வேண்டும். கோடைக் காலத்தில் தண்ணீர் கிடைப்பது சிரமம் என்று உங்களுக்கே தெரியும்..."

"இந்தப்பெரிய தொகையை எப்படித் திருப்பித் தரப் போகிறாய்?"

"நாலு தவணையாகத் திருப்பித் தந்துவிடுகிறேன். ஒரு பூந்தோட்டம் வாங்கியிருக்கிறேன். அதில் நல்ல வருமானம் வருகிறது."

"கனு, 25000 ரூபாய் என் நன்கொடையாக வைத்துக் கொள். 75000 ரூபாய் கடனாக இருக்கட்டும்."

"அம்மா, இன்னொரு வேண்டுகோள். நீங்கள்தான் எங்கள் கிராமத்துக்கு வந்து அந்தக் குடிநீர்த் திட்டத்தை ஆரம்பித்து வைக்க வேண்டும். எங்கள் கிராமத்தையும் நீங்கள் பார்க்கலாம்!"

கனு ரொம்ப நாளாக கிராமத்துக்கு வரச் சொல்லிக் கேட்டுக் கொண்டிருந்தான். எனவே, சரி என்றேன்.

**நா**ன் கிராமத்துக்குள் நுழைந்ததும் கனு என்னைப் பெரிய மாலை போட்டு வரவேற்று, இரண்டு எலுமிச்சம் பழங்களைத் தந்தான். கிராமத்தைச் சுற்றிக் காண்பித்தான். மக்கள் அவனை வணக்கம் சொல்லி மதித்ததைப் பார்க்க முடிந்தது.

சாட்டின் ரிப்பனை வெட்டி, குடிநீர் வசதியைத் திறந்து வைத்தேன். வெள்ளைச் சலவைக்கல் பலகையில், "இது தொண்டன் கஜானன் தன் கிராமத்துக்குச் செலுத்தும் அன்புக் காணிக்கை" என்று பொறித்திருந்தது. தேதியும் இட்டிருந்தது.

வழக்கம்போல, விழா நீண்டது. பேச்சுக்களும் நீண்டு கொண்டே இருந்தன. எனக்குத் தலைவலி தொடங்கியது. கனு என்னை ஒரு பழைய ஜெயின் ராணிக்கு இணையாக வர்ணித்தான். அது பொருத்தமில்லாத பொய்ச் சொல்லாக எனக்குப் பட்டது. வெறுப்பும் உண்டாயிற்று. எழுந்து போய்விடலாமா என்று யோசித்தேன்.

கனு எனக்கு மறுபடி மாலை இட்டு மரியாதை செய்து, ஒரு சேலையும், பழக்கூடையும் கையில் தந்தான்.

நான் என் காரை நெருங்கும்போது, கனு என்னிடம் ஒரு கவரைத் தந்து, "உங்கள் உதவிக்கு நன்றி!" என்றான்.

கார் பெங்களூரை நெருங்கும்போது, அவன் கொடுத்த கவரை எடுத்துப் பிரித்துப் பார்த்தேன். என் கண்களை நம்ப முடியவில்லை. அதில் 10,000 ரூபாய்க்கான காசோலை ஒன்றும், மீதி



டானிக் தொடர்

சுதா மூர்த்தி

90,000 ரூபாய்க்கு, குடிநீர்த் திட்டத்துக்குச் செலவான வகைகளுக்கு 'பில்'லும் இருந்தன.

எனக்கு ஒரு நிமிடம் தலை சுற்றியது. 'இது தொண்டன் கஜானின் அன்புக் காணிக்கை' என்ற பலகை நினைவுக்கு வந்தது.

கனு வெகு சிறிது காலத்திலேயே 'தேறி'விட்டான் என்று உணர்ந்து கொண்டேன்.

**ந**கரத்தில் மிகவும் வெற்றிகரமான வியாபாரி வெங்கட். மீனா கொஞ்சமும் சளைத்தவள் அல்ல. சந்தோஷமான குடும்பம்; ராஷ்மி, ராகவ் என்று இரண்டு புத்திசாலிக் குழந்தைகள்.

வெங்கட் நிறையத் தொண்டு நிறுவனங்களுக்கும், அறக்கட்டளைகளுக்கும் நன்கொடை வழங்குவார். இரண்டு முறை எங்களுக்கும் நன்கொடைகள் தந்திருக்கிறார்.

ராஷ்மி அவர் முதல் மனைவிக்குப் பிறந்தவள். ஆனால் அவளுக்குப் பிறகு அவரைக் கைப்பிடித்த மீனா ஒர வஞ்சனை எதுவும் இன்றி அவளிடம் நடந்து கொண்டாள்.

சில நாட்களுக்கு முன்பு மீனாவுக்கு அறுபதாம் வயது நிறைந்தது. வெங்கட் பெரிய விருந்துக்கு ஏற்பாடு செய்திருந்தார். ஏராளமான விருந்தினர்கள். நான் வியந்து போய் விட்டேன், கூட்டத்தைப் பார்த்து.

''வெங்கட், முன் காலத்தில் மகாராஜாக்கள்தாம் இந்த மாதிரி பொது நிகழ்ச்சிகளை நடத்துவார்கள். நீங்கள் நவீன மகாராஜா! சரி, எதற்கு இத்தனை பேரைக் கூப்பிட்டிருக்கிறீர்கள்? உங்களுக்கு விருப்பம் இருந்தால் பதில் சொல்லுங்கள். இல்லாவிட்டால் வேண்டாம்!'' என்றேன் தமாஷாக.

வெங்கட் சிரித்துவிட்டார். ''நான் மக்கள் நேசன். நான் மறைந்தால், இதே மாதிரி மக்கள் பெரும் கூட்டமாக வந்து அழுவார்கள். அப்போது நீங்கள் புரிந்து கொள்வீர்கள், எனக்கு எத்தனை சிநேகிதர்கள் என்று!''

துரதிர்ஷ்டவசமாக அந்த நிகழ்வுக்கு அதிக நாள் ஆகவில்லை. சிறிது காலத்துக்குள்ளேயே வெங்கட் மாரடைப்பால் காலமானார்.

செய்தி கிடைத்ததும், நான் உடனே அவர் வீட்டுக்கு விரைந்தேன். பெருங்கூட்டம் கூடியிருந்தது.

**மீ**னா, அப்படியே அதிர்ந்து போய் உட்கார்ந்திருந்தாள். எல்லோரும் மகன் ராகவ்வுக்காகக் காத்திருந்தார்கள். எனக்கு என்ன செய்வது என்று புரியவில்லை. ஒரு மூலையில் போய், அகல்யா மற்றும் ரூபா அருகில் உட்கார்ந்தேன். அவர்களும் வெங்கட்டுக்கு நல்ல சிநேகிதிகள். எல்லா விசேஷங்களுக்கும் வருவார்கள். அவர்கள் இருவரும் ரகசியக் குரலில் பேசிக் கொண்டிருந்ததால், நான் அதில் குறுக்கிடவில்லை.

''ரூபா, ஏன் இவ்வளவு தாமதம்? எனக்குத் தனியே உட்கார்ந்து போர் அடித்துவிட்டது. யாராவது கம்பெனி கொடுப்பார்களா என்று காத்திருந்தேன்!'' என்றாள் அகல்யா.

''எனக்குச் செய்தி கிடைத்தபோது, நான் மிஸ்டர் சென்னுடன் தாஜ் வெஸ்ட் எண்டில் உணவு அருந்திக் கொண்டிருந்தேன். நான் வண்ண மயமான சேலை உடுத்தியிருந்தேன். அதை மாற்றிக் கொண்டு இங்கே வர வேண்டிய





"இன்னிக்கு கனவுக் காட்சி எடுக்கறோம்னு ஹீரோயின் கிட்டே சொன்னது தப்பாப் போச்சா, ஏன்?"
"ஷூட்டிங்குக்கு வரும் போதே தூக்க மாத்திரை போட்டுட்டு வந்துட்டாங்க."
- புன்னகை மன்னன்

தாயிற்று!" என்றாள் ரூபா.

அதற்குள் மிஹிர், மேகனா கண்ணில் பட்டார்கள். அவர்கள் மீனாவிடம் போய் ஒரு நிமிடம் அவள் கையைப் பிடித்துக் கொண்டு நின்று விட்டுத் திரும்பி விட்டார்கள். "வெங்கட் இறந்து விட்டார் என்று நம்பவே முடிய வில்லை. நேற்றுத்தான் அவர் புதிய அலுவலகத்தின் உள் பகுதி பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். இப்போது ராகவ்வுக்கு அது பிடிக்குமோ என்னவோ! அவன் அடுத்த தலைமுறையைச் சேர்ந்தவன்!"

அதற்குள் அகல்யாவும், ரூபாவும் பேச்சை முடித்துக் கொண்டு வந்தார்கள்.

மிஹிர், ராகேஷுடன் பேசிக் கொண்டே, அடிக்கடி கைக் கடிகாரத்தையும் பார்த்துக் கொண்டிருந்தான். "இன்றைக்கு முக்கியமான இந்தியா - பாகிஸ்தான் கால் பந்து போட்டி இருக்கிறது. ஆனால் நான் போகமுடியுமா என்று தெரியவில்லை!"

அதற்குள் வக்கீல் ராமன் இரண்டு மூன்று இளைஞர்களுடன், நிறைய கோப்புகளையும் எடுத்துக் கொண்டு வந்தார். சிறு சலசலப்பு அப்போது எழுந்தது. அதற்குள் மாலினியும், ராகினியும் வந்து சேர்ந்தார்கள்.

"ஏதாவது சொத்துத் தகராறு இருக்கலாம்... ஆனால் அது பற்றிப் பேச இது சமயம் அல்லவே? ஒரு வேளை ராஷ்மி தன் ஆட்சேபணைகளை எழுப்பியிருப்பாளோ? மீனா அதற்குச் சம்மதித்திருக்க மாட்டாள். அதனால் வக்கீல்கள் வந்திருக்கலாம்."

"வெங்கட்டுக்கு எத்தனை வயது?" என்று கேட்டாள் ராகினி.

"அறுபது தாண்டியிருக்கலாம். ஆனால் சாவதற்கான வயதே அல்ல"

"சரிதான். சாவுக்கும் நேரம் இருக்கிறது. வீரு இறந்தபோது, எனக்குச் சங்கடமாக இருந்தது. சின்ன வயது. புத்திசாலி. அதைப் பார்க்கையில் வெங்கட் அதிக நாள் வாழ்ந்தார்..."

"வீரு குடித்துக் குடித்தே இறந்து போனார்" என்று யாரோ சொன்னார்கள்.

"ராகினி, உன் மகன் என்ன செய்கிறான்?" என்று கேட்டாள் அகல்யா.

"அவன் இளைஞன். துடிப்பானவன். நகரில் முன்னால் இருக்கும் 'பேச்சிலர்' அவன்."

"ஆமாம். வினய் தகுந்த ஜோடியைத் தேடிக் கொண்டிருக்கிறான். ஆனால் அவனுக்கு ஏ.பி.சி.யில் எம்.பி.ஏ. படித்த பெண்தான் வேண்டுமாம்!"

பேச்சுக்கள் தொடர்ந்து கொண்டே இருந்தன...

இதை எல்லாம் பார்க்கிறபோது, யாருமே இறந்து போன மனிதரைப் பற்றி உண்மையாக எதுவும் நினைப்பதில்லை என்பதை உணர்ந்தேன். தங்கள் முகத்தைக் காட்டிவிட்டு, வதந்திகளைக் கிளப்பிவிட்டு, தங்களோடு பிறரை அந்தஸ்தில் ஒப்பிட்டுவிட்டு, புறப்பட்டு விடுகிறார்கள்.

இந்தப் பின்னணியில், யாராவது நிஜமாகவே வருந்தி ஒரு சொட்டுக் கண்ணீர் விட்டால், இறந்துபோன மனிதர் நிச்சயம் பாக்கியம் செய்தவராக இருப்பார்.

**(பேசுவோம்)**

படம் : **யோகா**

# ரியல் விபூ கவிதைகள்!



* 'கஜினி' படத்தில் சூர்யா

**இ**து கஜினி சூர்யா கண்டெடுத்த மொட்டை!
அவரை பெண்டெடுத்த மொட்டை!
மொட்டையிலே கதை சொல்லும் வெட்டுத் தழும்பு!
முகத்திலோ விடமாட்டேன் எனும் அழும்பு
தண்ணீரில் தேடுவது வில்லனையா?
சுற்றிநிற்கும் தேவதைகள் சொல்லலையா?
காந்திபோல மொட்டைத் தலை
சுத்தியெல்லாம் எதற்குத் தல?



* 'தேவுடா' படத்தில் சத்யராஜ்

**கை**யிலே விலங்கு, கழுத்துலே கொட்டை
நெத்தியிலே பட்டை, புதுதினுசா மொட்டை!
காவிக்குள்ளே ஒளிஞ்சிருக்கும் போலிகளை
தோலுரிக்க வந்த கறுப்புச் சட்டை!
ஈரோடு பெரியார் தாத்தா
பெருமைப்படுவார் கெட்அப்பைப் பார்த்தா!



* 'காக்கி' பட கெட்-அப்பில் சரத்குமார்

'**இ**து கோடம்பாக்கமா திருப்பதியா?' என்று வியக்கும் அளவுக்கு ஹீரோக்கள் மொட்டை வேடம் கட்டும் சீசன் இது.

**எ**ட்டுமொழம் பட்டுவேஷ்டி, எடுப்பான வெள்ளைச்சட்டை
எல்லாமே மறந்துபோச்சா நாட்டாமை?
தாட்டுபூட்டு காக்கிசட்டை, தடாலடி ஐ.பி.எஸ்.
தமிழ்நாடு போலீஸுக்கு வெக்கிறீங்க ஐஸ்
இப்போ போனஸா போட்ட மொட்டை நைசு
எப்போதான் கூடும் உங்க வயசு?

தொகுப்பு : ரீ.ராக

# கிரிஸ்டல் கிளிகள்!

வானத்திலிருந்து குதித்து வந்தார்களா அல்லது பூலோக வாசிகள்தாமா என்கிற சந்தேகமே வந்துவிட்டது, சமீபத்தில் சென்னை லி ராயல் மெரிடியன் ஹோட்டலில் நடந்த கிரிஸ்டல் ஃபேஷன் ஷோவைப் பார்த்தபோது.

பெண்கள் விரும்பி அணியும் நகைகளில் இன்னும் என்னவெல்லாம் புதுமை செய்யலாம் என்று, ஆஸ்திரியா நாட்டைச் சேர்ந்த ஸ்வராவ்ஸ்கி மூளையைக் கசக்கியதில் உருவானது கிரிஸ்டல் ஜுவல்லரி. நகைகளில் கிறிஸ்டல் கண்ணாடிக் கற்களைப் பதித்து, பார்ப்பவர்களின் கண்களைக் கூசச் செய்வதுதான் இதன் சிறப்பம்சம். உலகெல்லாம் பெண்கள் இந்நகை மீது மோகம் கொண்டு அலைவதால், அதற்கு முன்பே நகைப் பைத்தியமாய் அலையும் நம்மூர்ப் பெண்களை மேலும் வசியம் செய்ய, இந்த ஃபேஷன் ஷோவை நடத்திக் காட்டினார்கள்.







கிரிஸ்டல் கற்கள் பதித்த நகைகள், அக்சஸ்சரிஸ், கைப்பைகள் போன்றவற்றை ஸ்டைலாக அணிந்து கொண்டு ஃபேஷன் ஷோவை மிளிர வைத்தனர் சென்னையின் முன்னணி மாடல்களான மேதா, சிம்ரன், ஹட்ஷத், நிருபமா, திவ்யா மற்றும் பவித்ரா.

ஆண்களெல்லாம் கிரிஸ்டல் கிளிகளை கண் சிமிட்டாமல் பார்த்துக் கொண்டிருக்க, அவர்களது மனைவி, மகள்கள் மினுக்கும் நகைகளை உன்னிப்பாக கவனித்து நோட்ஸ் எடுத்துக் கொண்டனர். வீட்டுக்குச் சென்றதும் லிஸ்ட் போட்டு ஆண்கள் வசம் ஒப்படைத்திருப்பார்கள். என்ன, தங்கம், பிளாட்டினம் நகைகளை விட இவற்றின் விலை சற்றே அதிகமாயிருக்கும், அம்புட்டுதான்.

**- செந்தில்**

படங்கள்: **ஸ்ரீஹரி**

உங்கள் காதலி எஸ்.எம்.எஸ் அனுப்பவில்லையா? ஆபீஸுக்கு லீவு போட்டு நீங்கள் எழுதிய கவிதைப் புத்தகம் விற்பனையாகவில்லையா? உங்கள் பாஸ் இரவு பதினொரு மணிக்கு செல்பேசியில் அழைத்து, '1947லிருந்து இன்றுவரை எத்தனை கொயர் பேப்பர் வாங்கினோம்' எனும் ரிப்போர்ட்டை மறுநாள் காலை 3.30க்குள் அனுப்பச் சொல்கிறாரா? இதுபோன்ற சமயங்களில் நீங்கள் எப்படி நடந்துகொள்ள வேண்டும்? "கவலையை விடுங்கள். உங்கள் பிரச்னைகள் எதுவாக இருந்தாலும், அதைக் கையாளும் முறையை நாங்கள் சொல்லித் தருகிறோம்" என்கிறார்கள் அமெரிக்க நவநாகரிக ஆசிரியர்கள். அமெரிக்காவின் தற்போதைய கிரேஸ், இவர்கள் நடத்தும் பயிற்சிப் பள்ளிகள்தான்.

சத்தம் போடாமல் சாப்பிடுவது எப்படி, பேசும்பொழுது தும்மல் வந்தால் என்ன செய்வது, தும்மல் வரும்போது ஃபோன் வந்தால் என்ன செய்வது, காதலிக்கு முத்தம் கொடுக்கும்பொழுது தலையில் பேன் வாக்கிங் போனால் என்ன செய்வது... இதுபோன்ற பல அதிமுக்கியப் பிரச்னைகளுக்குத் தீர்வு அளிக்கிறார்கள் இவர்கள். எல்லோரும் விரும்பும், எல்லோரும் ஏற்றுக் கொள்ளும் செயல்முறைகள் (Etiquette - நாக்கை சுழட்டுவிட்டு உச்சரிக்க வேண்டும்) இங்கு சொல்லிக் கொடுக்கப்படுகின்றன. "உடலுக்கு மேக்-அப் போடுவது போல் நம்முடைய பழக்க வழக்கத்திற்கு நாம் போடும் மேக்-அப்தான் இந்தப் பயிற்சி வகுப்புகள்'' என்கிறார் ஒரு எக்ஸிகியூட்டிவ்.

ஸ்பூனை எந்த விரலால் தூக்க வேண்டும், சட்டையிலிருந்து எத்தனை இன்ச் தள்ளி ஸ்பூனை உயர்த்த வேண்டும், ஓர் அறைக்குள் எப்படி நுழைய வேண்டும், எப்படி உட்கார வேண்டும், எப்படி எழுந்திருக்க வேண்டும் என்று கினிப் பிள்ளைக்கு சொல்லிக் கொடுப்பதைப் போல சொல்லிக் கொடுக்கிறார்கள். எல்லா வயதினரும் கலந்து கொள்ளலாம். பகுதி நேர வகுப்புகள் உண்டு.

மாணவர்களின் அறிவியல் பூர்வமான சந்தேகங்களை அவ்வப்போது தீர்த்து வைக்கிறார்கள். இதோ ஒரு நியூட்டன் மாணவனின் கேள்வி : "என் கேர்ள் பிரண்டோட பேசும்போது என்னோட முழங்கையும் என்னோட முழங்கால் நுனியும் டச் ஆகலாமா சார்?'' இது ஐன்ஸ்டீனின் கேள்வி : "சாப்பிடும்போது ஒரு துண்டு பீஸா தரையில விழுந்துடுச்சு. என்னைச் சுத்தி யாரும் இல்லை. லபக்குன்னு எடுத்து வாயில போட்டுக்கலாமா?'' ஆசிரியர்களும் புன்னகை செய்தபடியே "நோ நோ அப்படியெல்லாம் செய்யக்கூடாது'' என்று சொல்லி, சரியான வழிமுறைகளை சொல்லித் தருகிறார்களாம்.



மடியில் போட்டுக்கொண்டு நம் தாத்தா பாட்டி சிறுவயதில் சொல்லிக் கொடுத்த சங்கதிகளையெல்லாம், அதி பயங்கர பில்ட்-அப் கொடுத்து, கிளாஸ்வொர்க், ஹோம்வொர்க் எல்லாம் வைத்து, படம் வரைந்து பாகம் போட்டு சொல்லிக் கொடுக்கிறார்கள். உதாரணத்துக்குச் சில. சாப்பிடும்பொழுது நடக்கக்கூடாது. நடக்கும்போது சாப்பிடக்கூடாது. பிறர் சாப்பிடுவதை வைத்த கண் வாங்காமல் பார்க்கக்கூடாது. முருங்கைக்காய், மோர்க்குழம்பு, ஐஸ்க்ரீம் போன்றவற்றை சத்தமிடாமல் கையாள வேண்டும். பொது இடங்களில் பேன் பார்க்கக்கூடாது. பிறன் மனை நோக்கக்

# "சொல்ற மாதிரி செய்!"

கூடாது. சிரிக்கலாம், தவறில்லை. ஆனால் வயிற்றைப் பிடித்து, விழுந்து விழுந்து அருகிலிருப்பவர் தொடையைத் தட்டி, கிட்டத்தட்ட அவரைப் பிடித்துக் கீழே தள்ளி சிரிக்கக்கூடாது. விடியற் காலை மூன்று மணிக்கு பக்கத்து வீட்டுக் கதவை தட்டி 'காபிப்பொடி கிடைக் குமா?', 'நேத்து சீரியலை எங்கே விட் டாங்க?' 'கேக்கணும்னு நினைச்சேன், உங்கள் மாமியாரோடு ஏதாவது தக ராறா?' என்றெல்லாம் கேட்கக்கூடாது. இத்யாதி, இத்யாதி.

பர்லிங்க்டனில் எமிலி போஸ்ட் இன்ஸ்டிடியூட், வாஷிங்டனில் ப்ரோ டோகால் ஸ்கூல் ('1988 முதல் நாகரிகம் கற்றுத் தருகிறோம்') இப்படி தெருவுக்குத் தெரு நாகரிகம் சொல்லித் தருகிறார் கள். மாணவர்கள் குவிந்த வண்ணம் இருக்கிறார்களாம்.

என்ஜினியரிங் காலேஜுக்குப் பதில் நம் ஊரில்கூட யாராவது இது போன்ற ஒரு நாகரிகப் பள்ளியைத் தொடங் கலாம். மிகவும் உபயோகமாக இருக்கும். 'மாடு கன்னு போட்டிருச்சு டோய்ய்ய்' என்று உள்நாக்கு துடிக்க, செல் ஃபோனில் பேசுபவர்கள், ஜன்னல் கதவை அகலமாகத் திறந்து வைத்துக் கொண்டு, நகரத்தை பிளேடால் கீறு வதைப் போல பாட்டுப் பாடும் பக்கத்து வீட்டு பாகவதர்கள் (சிலருக்கு பக்க வாத்தியத் திறமையும் சேர்ந்தேயிருக்கும்) வெடிவைத்து பாறையை உடைப்பதைப் போல, அப்பளத்தை நொறுக்கி கபளீ கரம் செய்பவர்கள், வெத்தலையைக் குதப்பிக்கொண்டே 'நாழ் சொழ்ற மாதிழி செய்' என்று தெளிவாகப் பேசு பவர்கள், பல் தேய்க்கிறேன் பேர்வழி என்று அதிகாலை அலாரம் வைத்து எழுந்து, நாக்கை கீறிக் கீறி வாந்தி எடுப்பவர்கள், இப்படிப் பலரும் திருந்த வாய்ப்பிருக்கிறது.

'இந்தப் பள்ளியிலிருந்து அப்படி என்னதான் கற்றுக் கொண்டீர்கள்?' என்று ஒரு அமெரிக்க இளைஞனை வழி யில் மடக்கிக் கேட்டால், அவர் இப் படிச் சொல்கிறார். ஸ்டெப் 1 : 'கேள்வி கேட்ட உங்களுக்கு என் முதற்கண் வணக்கம்' கழுத்து ஒருபுறம் சாய்ந்திருக் கிறது. உதடுகள் குவிந்திருக்கின்றன. ஸ்டெப் 2 : 'இந்தப் பள்ளியிலிருந்து நான் கற்றுக் கொண்டது என்னவென்றால்...' இடது கை பெருவிரல் வலது கை ஆட் காட்டி விரலோடு இணைகிறது. தோள் பட்டை மெலிதாக நான்கு முறை குலுங்குகிறது. 'மன உறுதியும், நம் பிக்கையும்தான்' இரண்டு கண்களும் கால் சென்டிமீட்டருக்கு மூடி மூடித் திறக்கின்றன. ஸ்டெப் 3 : 'உங்கள் கேள்விக்கு மிக்க நன்றி' பின்புறமாக நகர்ந்து நகர்ந்து (மரியாதையாம்) ஒரு மாதிரியாக புன்னகை செய்தபடியே (சிநேகமாம்) சென்று மறைகிறார்.

சும்மா சொல்லக்கூடாது, நன்றா கவே சொல்லிக் கொடுத்திருக் கிறார்கள்.




- மருதன்

## உலகம் இவ்வளவுதான்!

**மி**திவண்டியை வாசலில் நிறுத்திவிட்டு, மிகுந்த களைப்புடன் வீட்டுக்குள் நுழைந்தான் மாணிக்கம்.

சிறிய குடிசை வீடு. வீட்டின் ஒரு மூலையில் எரிச்சல் கண்ட கண்களைக் கசக்கியபடி, விறகு அடுப்புடன் போராடிக் கொண்டிருந்தான் கல்யாணி.

"ஹைய்யா... அப்பா வந்தாச்சு..." உற்சாகமாகக் குரல் கொடுத்தான் பாபு.

பாபு மாணிக்கத்தின் ஒரே மகன். நகராட்சிப் பள்ளியில் ஐந்தாம் வகுப்பு படிக்கிறான். அவன் எதிரே ஆறு பேனா மூடிகள் தரையில் சிதறிக் கிடக்க... ஒவ்வொரு மூடியாக எடுத்து ஊதி, அதிலிருந்து 'விசில்' ஒலியை வரவழைத்தான்.

அந்தச் சத்தம் மாணிக்கத்துக்கு எரிச்சல் ஊட்டியது. எரிச்சல் புகைந்தெழுந்து கோபமானது.

"ஏண்டா... நாயே, படிக்காம பேனா மூடிகளை வெச்சுக்கிட்டு என்னடா விளையாட்டு இது?... ஏண்டி... இவன்தான் சின்னப் பையன், புத்திக் கெட்டு எதையாவது செய்றான்னா... உனக்கு அறிவு வேணாமா?... மகாராணிக்கு சோறு பொங்குறது மட்டுமே பெரிய

**"என் ராசா... என்னால கூட**

**உன் மனசைப்**

**புரிஞ்சுக்க முடியலையே..."**



வேலைன்னு நினைப்பு..." என்று கத்தியவன், வலது காலை உயர்த்தி, கீழே இருந்த பேனா மூடிகளை பலம் கொண்ட மட்டும் மிதித்து உடைத்தான்.

அப்பாவின் கோபத்தையும், ஆசை ஆசையாகச் சேர்த்து வைத்திருந்த பேனா மூடிகள் உடைந்து நொறுங்குவதையும் பார்த்த பாபு மிரண்டு போனான். கண்களில் கண்ணீர் முட்டியது.

# விசில்!

புல்லாங்குழலைப் போல இசையை எழுப்பும் சிவப்புப் பேனா மூடியையாவது உடைவதற்கு முன் காப்பாற்றி விட வேண்டும் என்ற எண்ணத்தில், அவசர அவசரமாக பாபு அதை எடுக்க சட்டென்று கைநீட்ட... மாணிக்கத்தின் வெறி உதைப்பில் அவன் பிஞ்சு விரல்கள் சிக்கிக் கொண்டன. திடீரென்று ஏற்பட்ட உயிர் போகிற வலியில் "அம்மா..." என்று அலறினான் பாபு.

"ஐயோ... என்னய்யா ஆச்சு உனக்கு?... படிக்கிறப் பிள்ளையோட எழுதுற கையை நாசம் பண்ணிட்டியேய்யா..."

கதறிய கல்யாணி பதற்றத்தோடு துள்ளி எழுந்து வந்து, பாபுவைக் கட்டி அணைத்துக் கொண்டாள். தாய்க் கோழியின் இறக்கை அணைப்புக்குள் புதையும் குஞ்சுக் கோழியைப் போல் கையை உதறிக் கொண்டு தாயின் மடியில் கவிழ்ந்தான் பாபு.



கோபக் கொதிப்பு மெல்ல மெல்ல அடங்க... சில கணங்கள் அங்கே நின்றான் மாணிக்கம். மனைவியும், மகனும் அழுது சங்கடப்பட்டுக் கொண்டிருக்கும் அந்த இக்கட்டான சூழ்நிலையைக் காணச் சகிக்க முடியாமல் "ச்சே!" என்று வெறுப்போடு குடிசையை விட்டு வெளியேறினான்.

**மா**ணிக்கம் வீட்டுக்குத் திரும்பிய போது இரவு பத்து மணிக்கு மேலாகி விட்டது.

வீட்டின் தட்டிக் கதவை தள்ளித் திறந்தான். மாடத்தில்

விஜயநிர்மலன்

இருந்த சிம்னி விளக்கு மினுக்கு மினுக்கென்று எரிய புகை வாசமும், இரவு வடித்த கஞ்சியின் வாசமும் கலந்து ஒரு வினோத நெடி மூக்கை எட்டியது.

விளக்குத் திருகைத் திருகி, நல்ல வெளிச்சத்தைக் கொண்டு வரக்கூட மாணிக்கத்தின் மனசு வெட்கப்பட்டது. கண நேரக் கோபம் எப்படி அவசரப்படுத்தி, அவனை அலைக்கழித்து விட்டது!

காலம் தவறிய ஞானம்! மாணிக்கம் நடந்ததை நினைத்து நினைத்து வேதனைப்பட்டான்.

குடிசையின் இடது பக்க மூலையில் கல்யாணி, பாபுவை கட்டிப் பிடித்துக் கொண்டு படுத்திருந்தாள். பாபுவின் வலது கையில் ஈரத்துணி சுற்றியிருந்தது.

'பாவம், புள்ளைக்கு ரொம்பவும் வலிச்சிருக்கும். உயிர் போகிற மாதிரி எப்படி துடிச்சுப் போயிட்டான்... நான் பாட்டுக்கு வெளியே போயிட்டேன். கல்யாணி என்ன பாடுபட்டாளோ...!' நினைத்து நினைத்துக் குமைந்தான்.

தட்டிக் கதவை சாத்தி விட்டு முட்டிக் கொண்டு வந்த இருமலை கட்டுப் படுத்த முடியாமல், அதன் போக்குக்கு விட்டு விட்டு சத்தமாய் ஏழெட்டு முறை இருமினான்.

அந்தச் சூழ்நிலையிலும் கல்யாணி தன் கடமையை மறக்காமல், கணவனுக்கு தனியாகப் பாய் விரித்து, தலையணை போட்டு வைத்திருந்தாள். தலைமாட்டில் மூடிய தண்ணீர்ச் செம்பும், பக்கத்தில் பீடிக்கட்டும் வத்திப்பெட்டியும் இருந்தன.

மாணிக்கம் பாயில் விழுந்தான். மன உளைச்சலில் அவனுக்குப் பசியும் இல்லை, தூக்கமும் வரவில்லை. வெறுப்போடு கண்களை மட்டும் மூடியிருந்தான்.

**கொ**ஞ்ச நேரத்துக்குப் பிறகு...

"அட... பாசாங்கெல்லாம் போதும். எழுந்திருய்யா... சாப்பிடாம கனைப்புல பீடி புடிச்சா இருமல்தான் வரும். சாப்புட்டுப் படு. காலம்பற வேலைக்குப் போவணுமில்ல..."

மாணிக்கத்தின் கால்களைப் பிடித்து உலுக்கினாள் கல்யாணி.

'அப்பாடா... கல்யாணி பேசிட்டா. எதையும் மனசுல வெச்சுக்க மாட்டா... எவ்வளவு நல்லவ அவ...' சுமையாய் அழுத்திக் கொண்டிருந்த அத்தனை பாரமும் அந்த நொடியிலேயே கழன்று... கரைந்து காற்றில் கலந்து விட்டதைப் போல் உணர்ந்தான் மாணிக்கம்.

"நீயும், பாபுவும் சாப்பிட்டாச்சா...?"

படுக்கையில் இருந்தபடியே கேட்டான் மாணிக்கம்.

"ம். சாப்டாச்சு" என்றாள் கல்யாணி.

"பொய்தான சொல்ற? நான் சாப்பிடாம நீ என்னைக்குப் புள்ள சாப்பிட்டிருக்கே..."

"தெரியுதுல்ல. அப்புறம் எதுக்கய்யா கேள்வி? குருவிக் கூட்டை விட நம்ம உலகம் ரொம்பச் சின்னதுய்யா. இதுல எதுக்கு சண்டையும், கோவமும்? ஒருத்தர் அழுதா இன்னொருத்தருக்கு வலிக்கும் போது, இதுல பிணக்கு எதுக்கு? கோபத்தால யாருக்கு என்ன லாபம்னு சொல்லு?"

"..............."

"ஆமா... வேலை முடிஞ்சு வீட்டுக்குள்ள நுழைஞ்சதுமே ஏய்யா உனக்கு அத்தனைக் கோவம்?... பாவம் பாபு, நீ வருவேன்னு எவ்வளவு ஆசையா காத்திருந்தான் தெரியுமா?.... 'அம்மா, நான்



நிறைய பேனா மூடி சேர்த்து வெச்சிருக் கேன். ஊதினா ஒவ்வொண்ணுலேயிருந் தும் விதவிதமா விசில் சத்தம் வரும். அப்பா வந்ததும் ஊதிக் காட்றேன் பாரேன்... ரொம்ப சந்தோஷப்படுவார்'னு சொன்னான். நானும் நீ சந்தோஷப்படு வேன்னு நெனச்சு... சரி அப்பா வந்ததும் ஊதிக் காட்டு, நானும் கேட்கிறேன்னு சொன்னேன். ஆனா நீ என்ன நெனப்புல நுழைஞ் சியோ... நம்ம புள்ள வலி தாளாம அழு றதுதான் மிச்சம்!" குரல் உடைய சொன் னாள் கல்யாணி.

"நான் வேணும்னே கோவப்படல புள்ள. என்ன பண்றது?... என் மனசுல முட்டிக்கிட்டுக் கெடந்தது, சாக்கடைக் கூளமா வெளியே வந் துடுச்சு. என் பொழப்பு தான் உனக்குத் தெரியுமே... பாக்குறது வாட்ச்மேன் உத்தியோகம். அதுவும் பார்க்கிங் ஏரியா வாட்ச்மேன். வர்ற வண்டிகளை லைன் கட்டுறது, ரிவர்ஸ் பார்க்கிறது, டோக்கன் போடுறது. இது தானே என் பொழைப்பு. எப்பவும் வாயும் விசிலுமா நெஞ்சு காஞ்சிக்கிடப்பேன். என் தலையெழுத்து தான் இப்படி விசில் ஊதுற பொழைப்பாப் போச்சு. என் புள்ளையாவது நல்லாப் படிச்சு கௌரவ மான உத்தியோகம் பார்க்கணும்னு நான் வேண்டாத சாமி இல்ல"

"என் நெஞ்சு முழுக்க இப்படி ஒரு நினைப்பு செழிச்ச மரம் மாதிரி வளர்ந்து நிக்கும்போது, நம்ம புள்ள பாபு செஞ்ச காரியம் என்னை கோவக்காரனா மாத்திடுச்சு. விசில் சத்தத்தையோ, இல்லை அந்த மாதிரி வேறு எதைக் கேட்டாலும் எனக்கு உடனே பைத்தியம் புடிச்ச மாதிரி ஆயிடுது. என்ன பண்றது புள்ள...?"

மாணிக்கம் சொல்லிவிட்டு மனம் உடைந்து அழத் தொடங்க... துணுக் குற்றாள் கல்யாணி.

"ஐயோ... என் ராசா... இதுதானா விஷயம்?... என்னால கூட உன் மனசைப் புரிஞ்சுக்க முடியலையே..." என்று மனம் வெதும்பிச் சொன்னவள் மாணிக்கத்தின் கண்களைத் துடைத்தாள்.

எதை எதையோ யோசித்தாள்.

கொஞ்ச நேரம் சென்றதும்... "இந்தா கொஞ்சம் எழுந்திரேன், ஒரு விஷயம் சொல்றேன்" என்றாள் கல்யாணி.

மாணிக்கம் எழுந்து உட்கார்ந்தான்.

"தோ...பாருய்யா. நீ மறக்க நினைக் கிறதை நான் ஞாபகப்படுத்துவதா நெனச்சு கோவிச்சுக்கக் கூடாது. அப் படின்னா... சொல்வேன்..."

முன்னெச்சரிக்கையோடு பேசிய வளிடம், "சரி சொல்லு" என்றான் மாணிக்கம்.

கல்யாணி தயங்கித் தயங்கி சொன் னாள்...

"நல்லா யோசிச்சுப் பாருய்யா... விசில் சத்தம் ஒண்ணும் கேவலம் இல்லய்யா. அந்தச் சத்தம்தான்ய்யா நமக்கு மூணு வேளை சோறு போட்டு... புள்ளையையும் நல்ல விதமா படிக்க வைக்குது. எல்லாத் துக்கும் தொடக்கமே இந்த விசில் சத்தம் தான்! அம்மாம் பெரிய ரயில் வண்டியே விசில் சத்தம் கேட்ட பிறகுதானய்யா புறப்படுது? அதே மாதிரி நம்ம வாழ்க் கையில் நாம முன்னோக்கிப் போறதுக்கும், நம்ம புள்ளையே அதும் வாயால விசில் சத்தம் கொடுத்ததுன்னு நல்லதையே நினைச்சுக்குவோமே!..." - கல்யாணி மாணிக்கத்தின் மனதை வருடும் விதமாக, நெகிழ்ச்சியோடு சொல்ல... மாணிக்கம் சட்டென்று முகம் மலர்ந்தான். ○



"என்னடி இது... உங்க வீட்டுப் பாத்திரங்களில் 'மெ.ஒ.மு'ன்னும் 'மெ.ஒ.பி'ன்னும் பேர் வெட்டியிருக்கு...?"

"மெட்டி ஒலிக்கு முன்பு வாங்கியது... மெட்டி ஒலிக்கு பின்பு வாங்கியது'ன்னு விவரம் அறிஞ்சுக்க அப்படி குறிச்சு வச்சிட்டேன்...!"

- கண்ணகி

போட்டுத் தாக்கு!

# த்ரிஷாவிடம் கேட்கக் கூடாத பத்துக் கேள்விகள்!

1. முதல் படம் மாதிரியே நடிப்பும் 'லேசா லேசா'னுதான் இருக்கணுமா?
2. உங்களுக்குப் பிடிச்ச விளம்பரம் (ஓட்டல் பாத்ரும்ல) 'குளிக்காதே'தானே?
3. ஷூட்டிங்குல ரோட்ல ஆடுன ஞாபகத்துலதானே, ஈசிஆர் ரோட்லயும் தோழிகளோடு ஈஷிட்டு ஆடினீங்களா?
4. நீங்க அனாசின் சாப்பிடற அளவுக்குத் தலைவலி தர்ற நடிகை அசின்தானே?
5. விஜய்யைக் கூட கிசுகிசுவுல மாட்டிவிட்ட ஒரே இல்லி நீங்கதானாமே?
6. நாடுல்லை விடவும் மெலிதாக இருப்பது எப்படின்னு ஒரு புக் எழுதினால் என்ன?
7. குத்தாட்டம் இல்லாத படங்களை அம்மணி ஒத்துக்கறதே இல்லை போலிருக்கு!
8. தமிழ்நாட்டிலேயே பிறந்து வளர்ந்த டமில் பெண்ணே, தமிழ்க்குடிதாங்கியின் தமிழ் பலகைகளை எழுத்துக் கூட்டி யாவது வாசிச்சீங்களா?
9. சர்ச்சைகளில் சிக்கிட்டு அப்புறம் அறிக்கை விடறதுக் காகவே தனி ஆஃபீஸ் தொறக்கப் போறீங்களாமே?
10. உங்களைவிட உங்க மம்மிதான் பத்திரிகைகளுக்கு அதிகமா பேட்டி தர்றாங்க போலிருக்கு?

- பரமு



# நடக்குமென்பார்; நடக்கும்!

## தஞ்சை பரத்வாஜ்




**மேஷம் :** இந்த வாரம் உங்களுக்கு நினைத்த காரியத்தில் வெற்றி கிட்டும். சுபகாரிய நிகழ்ச்சிகள் கைகூடும். புதிய வீடு வாசல் வாங்க உத்தமம். வாகனம் வாங்கும் யோகம் உண்டு. குழந்தைகள் வழியில் சுபச் செலவுகள் ஏற்படும். மாணவ மாணவிகளுக்கு கல்வியில் மேன்மை கிட்டும். உத்தியோகத்துல வேலை மாறுதல் ஏற்படலாம். வியாபாரிகள் தொழிலை அபிவிருத்தி செய்ய உத்தமம். குரு / சனி வழிபாடு நடக்கும்.

**ரிஷபம் :** நல்ல வாரம். புதிய ஆபரண வஸ்துகள் சேரும். குழந்தைப் பேறு இல்லாதவர்களுக்கு குழந்தைப் பேறு ஏற்படும். புதிய வாகனம், வீடு வாங்க நேரம் இது. நண்பர் உறவினரால் அனுகூலம் ஏற்படும். உத்தியோகத்தில் பதவி உயர்வு, பணி மாற்றம் வரும். திருமணம் ஆகாமல் தடைப்பட்டு வந்தவர்களுக்கு திருமணம் நடக்கும். புதிய தொழில் செய்ய நல்ல நேரம். கேது வழிபாடு நல்லது.

**மிதுனம் :** அற்புதமான வாரம். சுய கௌரவம், அந்தஸ்து உயரும். நீண்ட நாள் தடைப்பட்டு வந்த திருமணம் கைகூடும். புதிய வேலை வாய்ப்பு கிட்டும். உடன் பிறப்புகளால் உதவி கிட்டும். வீடு மாற்றம் ஏற்படும். வியாபாரிகள் நல்ல முன்னேற்றம் அடைவார்கள். பங்கு மார்கெட் தொழில் நன்கு வளம் பெரும். தொழில் ஸ்தாபனத்தில் இருந்துவந்த நெருக்கடிகள் குறையும். குரு / ராகு / கேது வழிபாடு தேவை.

**கடகம் :** பொன்னான வாரம் இது. வாக்கு, தனம், கல்வி மேன்மை பெறும். சுபகாரிய செலவுகள் ஏற்படும். தெய்வ பலம் ஏற்படும். வீடு மாற்றம் ஏற்படும். வெளிநாட்டுப் பணி கிடைக்கும். புதிய முயற்சிகள் கை கொடுக்கும். நீண்ட நாள் வராமல் இருந்த பணம் வந்து சேரும். குரு / கேது வழிபாடு தேவை.

**சிம்மம் :** சூப்பரான வாரம். பண வரவில் குறைவு வராது. திருமணக் காரியம் நடக்கும். நெருக்கமான

**24.8.2005 முதல் 30.8.2005 வரை**

வர்கள் இடம் மாறிச் செல்வார்கள். வாக்கு வாதம் யாரிடமும் செய்ய வேண் டாம். உடல்நிலையில் கவனம் தேவை. வண்டி வாகனத்தில் செல்லும்போது உஷார். சுபகாரிய நிகழ்ச்சிகள் நடக்கும். வீடு வாசல் வாங்க ஏற்ற காலம். வியா பாரிகள் எதிலும் முதலீடு செய்யும் பொழுது பார்த்துச் செய்யவும். ஆஞ்ச நேயர் ஸ்தோத்திரம் படித்து வரவும்.

**கன்னி** : வெற்றி தரும் வாரம் இது. உத்தியோகத்தில் நல்ல மாறுதல், வெளி நாடு செல்லும் வாய்ப்பு கிட்டும். குழப்ப மான சூழ்நிலை விலகி நல்லது நடக்கும். வியாபாரிகளுக்கு புதிய தொழில் ஆரம் பிக்க உத்தமம். பொருளாதாரச் சிக்கல் விலகும். வீடு வாசல் வாங்க ஏற்ற நேரம். திருமணம் ஆகாவர்களுக்கு திருமணம் நடக்கும். ராகு/கேது/குரு வழிபாடு நல்லது.

**துலாம்** : எதிலும் கவனம் அவசியம். உடல் ஆரோக்கியத்தில் கவனம் தேவை. வேலையில் பளு அதிகரிக்கும். சிலர் மனைவி மக்களை விட்டு வெளிநாடு செல்வார்கள். வாக்கு, தனம் நன்றாக இருக் கும். புதிய தொழில் செய் வதை தள்ளிப் போடவும். திருமணக் காரியம் கை கூடும். குழந்தைகளால் மன வருத்தம் ஏற்படும். வியாபாரி களின் தொழில் சற்று மந்த நிலை இருக்கும். குரு / சனி வழிபாடு சிறந்தது.













**விருச்சிகம்** : வெற்றி தரும் வாரம். வாக்கு தனம் மேன்மை ஏற்படும். குழந்தை கள் வழியில் சுபகாரியம் ஏற் படும். நண்பர் உறவினர் களால் அனுகூலம் ஏற்படும். மாணவ மாணவிகள் நல்ல பலனை அடைவார்கள். வியாபாரிகளுக்கு தொழில் அபிவிருத்தி ஏற்படும். திரு மணம் ஆகாதவர்களுக்கு திருமணம் நடக்கும். உத்தி யோகஸ்தர்களுக்கு பதவி உயர்வு, பணிமாற்றம் ஏற் படும். சிலர் வெளிநாடு செல் வார்கள். ஷேர் மார்க்கெட் தொழில் செய்பவர்கள் நல்ல பலனை அடைவார்கள். கலைஞர்களுக்கு ஏற்றம் தரும் வாரம் இது.

**தனுசு** : சுமாரான வாரம். எதிலும் கவனம் தேவை. ஆரோக்கியத்தில் கவனம் அவசியம். அவசரப்பட்டால் வேலையை விட நேரும். பொறுமை தேவை. குடும்பத் தில் கணவன் மனைவி விட்டுக் கொடுத் துப் போவது நல்லது. பொருளாதாரப் பற் றாக்குறை இருக்கும். திருமணம் கைகூடும். மாணவ மாணவிகளுக்கு படிப்பில் கவ னம் தேவை. சிலருக்கு வெளிநாட்டி லிருந்து அழைப்பு கிட்டும். புதிய வீடு வாசல் வாங்குபவர்கள் சற்று தள்ளிப் போடவும். குரு / ராகு / கேது / சனி வழிபாடு சிறந்தது.

**மகரம்** : நற்பலன் மிகுந்த வாரம். புதிய தொழில் தொடங்க உத்தமம். வீடு, வாக னம் வாங்க ஏற்ற காலம். ஷேர் மார்க் கெட் தொழில் செய்பவர்களுக்கு நல்ல அதிர்ஷ்டம் கிட்டும். வியாபாரிகளுக்கு பொருளாதாரச் சிக்கல் விலகி பணவரவு பெருகும். தெய்வ தரிசனம் கிடைக்கும். திருமணம் ஆகாமல் தடைப்பட்டு வந்த வர்களுக்கு திருமணம் கை கூடும். உல்லாசப் பிரயாணம் ஏற்படும். வெளிநாடு சென்று புதிய ஒப்பந்தம் செய்யும் வாய்ப்பு வரும்.

**கும்பம்** : முன்னேற்றம் தரும் வாரம். நீண்ட நாட்களாக முடியாத வழக்கு வியாஜ்யம் வியாபாரம் வெற்றி அளிக்கும். யாரிடமும் வாக்குவாதம் செய்ய வேண் டாம். நெருங்கிய உறவினர் (அ) நண்பர் களைப் பிரியும் சூழ்நிலை வரும். கைப் பொருள் மீது கவனம் தேவை. கணவன் மனைவி விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. புதிய தொழில் தொடங்குவதை சற்று தள்ளிப் போடுவது நல்லது. கொடுக் கல் வாங்கலில் எச்சரிக்கை தேவை. ராகு / கேது / குரு வழிபாடு சிறந்தது.

**மீனம்** : பிரிந்து வாழ்ந்தவர்கள் ஒன்று சேரும் காலம். சுபகாரியம் நடக்கும். குடும் பத்தில் விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. புதிய வீடு வாசல் வாங்க ஏற்ற காலம். குழந்தைகள் வழியில் நற்பலன் ஏற்படும். வாக்கு மேன்மை பெறும். சுபச்செலவுகள் ஏற்படும். சிலருக்கு வெளி நாடு செல்லும் வாய்ப்பு வந்து சேரும். ஷேர் மார்க்கெட் தொழில் செய்பவர் களுக்கு நல்ல பலன் அளிக்கும். கலைஞர் களுக்குப் பொன்னான காலம். ராகு / கேது/ வழிபட்டு வருதல் நலம்.

# பரத்வாஜ் பதில்கள்

**எனக்கு 45 வயதாகிறது. பரம்பரையான செல்வங்களை என் தந்தை இழந்ததால், தற்போது சிறுகடை வைத்து பிழைப்பு நடத்தி வருகிறேன். ஆன்மிக நாட்டத்தினால் திருமணமாகவில்லை. வேறு தொழிலில் இறங்குவது நல்லதா?**

**- கே.ஏ.ஹரிராம்**

உங்கள் ஜாதகப்படி திருமண யோகம் அத்தனை வலுவாக இல்லை. தொழிலிலும் சாதாரணப் பலன்களே இருக்கின்றன. உங்கள் ஆன்மிக நாட்டத்தில் தொடர்ந்து ஈடுபட்டு, இப்படியே காலம் கழிப்பதே நிம்மதி தரும். இருக்கும் தொழிலில் மெள்ள முன்னேற்றம் பெறுவதே உத்தமம்.

**வெளிநாட்டில் இருக்கும் என் இரண்டாவது மகனுக்கு திருமணம் எப்போது நடக்கும்? உத்தியோகத்தில் முன்னேற்றம் உண்டா? சொந்தத் தொழில் செய்யலாமா? இந்தியாவுக்குத் திரும்பிவரும் வாய்ப்பு உண்டா?**

**- சாவித்திரி, சென்னை - 4**

உங்கள் மகனுக்கு ராகுபுத்தி அக்டோபர் 2006 வரை இருப்பதால், அதன்பிறகு திருமணம் கைகூடும். பிறந்த ஊருக்கு மேற்கு திசையிலிருந்து, இரு உடன்பிறந்தவர் உள்ள, மேற்கு பார்த்த வீட்டில் வசிக்கும் படித்த பெண் அமையும். திருமணத்துக்குப் பின் மகனுக்கு அதிர்ஷ்டம் கூடும். வெளிநாட்டில் வசிக்கும் யோகம் அதிகமிருக்கிறது. சொந்தத் தொழில் செய்யும் வாய்ப்பு குறைவு. தொடங்குவதானால் மனைவி பெயரில் தொடங்குவது நல்ல பலனைத் தரும்.

**என் மகனுக்கு எத்தனை முயன்றும் திருமணம் கைகூடவில்லை. எப்போது திருமணம் நடக்கும்?**

**- என். ராஜலட்சுமி, சென்னை - 78**







உங்கள் மகனுக்கு செப்டம்பர் 2005க்குப்பின் திருமணம் கைகூடும். பிறந்த ஊருக்கு அருகில் பெண் அமையும்.







**என் மகனுக்கு படிப்பு சரியில்லாததால் வேலையும், தொழிலும் சரியில்லை. மண வாழ்க்கையிலும் திருப்தியில்லை. செய்யும் தொழிலும், மணவாழ்க்கையும் எப்போது சரியாகும்?**

**- ச.சீ.நா. ராஜன், சென்னை**

உங்கள் மகனுக்கு கிரகசாரம் விரோத பாவத்தில் அமைந்திருப்பதால் தொழில், மணவாழ்வு சரியாக அமைய இன்னும் சில காலம் ஆகலாம். மனைவியின் யோகம் காரணமாகவே இவருக்கு மேன்மை கிட்டும் வாய்ப்பு உள்ளதால், மனைவி பெயரில் தொழில் செய்வதும், அனுசரித்துப் போவதும் நன்மை தரும். உங்கள் மருமகள் பெயரை சற்று மாற்றி வைப்பதும் பலன் தரும்.

**என் தம்பி மகனுக்கு நிலையான, நல்ல வேலை கிடைக்காமல் சிரமமாக உள்ளது. எப்போது அவனுக்கு நல்ல வேலை கிடைக்கும்?**

**- கே. சந்தானம், பெங்களூர் - 24**

ஜாதகருக்கு 28 வயதில் நல்ல வேலை அமையும் யோகம் உள்ளது. வெளிநாட்டில் வேலை பார்க்கும் வாய்ப்பு அதிகம் உள்ளதால், அதற்காக முயற்சி செய்வது நல்லது. இந்தியாவில் நிரந்தர வேலை கிடைப்பது சிரமம். ●



# “தேங்கா...மாங்கா...





**எ**ன்னடா இது! போனவாரம் கையில கட்டோட ஜி.எச். பக்கம் மெட்ராஸ் பாஷையில பேசிக்கிட்டு, சுத்திக்கிட்டு இருந்தவன், திடீர்னு சுண்டல் பாத்திரத்தோட சவுண்டு கொடுக்குறானேன்னு பார்க்கறீங்களாப்பு...? எல்லாம் ஒரு சேஞ்சுக்குத்தான்.

நான் போன அன்னிக்கு சுதந்திர தினம். அதான் பீச்சு பூரா எங்கப் பார்த்தாலும் தலை தலையா தெரிஞ்சுது. நம்ம குட்டீஸ்ங்க ஒரு பக்கம் கிரிக்கெட்டு, ஸ்கேட்டிங்னு செம பிஸி. இன்னொரு பக்கம் பெருசுங்க பஜ்ஜி, சமோசாவை பாத்திக்கட்டி அடிச்சுக்கிட்டு இருந்துதுங்க. இன்னொரு பக்கம் காலேஜூப் பசங்க ரெட்டை ரெட்டையா ரொம்ப சுதந்திரமா திரிஞ்சுக்கிட்டு இருந்துச்சுங்க.

“இன்னாபா... ஏரியாவுக்கு புச்சு மாதிரி தெரியுது”னு ஒரு முறுக்கு வியாபாரி நம்மகிட்ட வர, நானும் “ஆமாண்ணே. நமக்கு பெருங்குடி பக்கம் வீடு. வேலை எதுவும் கிடைக்கல. அதான் இப்படி சுண்டலும் கையுமா கிளம்பிட்டேன்”னு சொல்லிட்டு, நைஸா அவர் கூடவே நடக்க ஆரம்பிச்சேன்.

“ஏண்ணே. இங்க யாவாரம் எப்படி இருக்கு...?”

“ம்... ஆடுவாசலை வழிச்சிக்கினு போன மாதிரி இந்த சுனாமி யாவாரத்தையும் சேத்து வழிச்சிக்கினு போயிடுச்சு. இப்போ முன்ன மாதிரி இல்லன்னாலும், ஏதோ பரவால்ல...”

“இப்போ ஜோடிங்க வர்றது எப்படிண்ணே இருக்கு...?”

“யேய்... இன்னா தொணதொணன்னு கேள்வி கேட்டுக்கினுகிற. எல்லாத்தையும் வித்துப்புட்டியா... போ... வந்த வேலையைப் பாரு”ன்னுட்டு அவரு கிளம்ப, நான் பீச்சு ஓரமா ‘சுண்டல்... சுண்டல்’னு கூவிக்கிட்டே நடக்க ஆரம்பிச்சேன். காலுதான் வலிச்சுதே ஒழிய மேட்டரு ஒண்ணும் தேறல. தூரத்துல ஒரு பூக்காரம்மா உட்காந்துக்கிட்டு இருந்துச்சு. நைஸா அதுகிட்ட போய் உட்கார்ந்து போட்டு வாங்கினேன்.

“யக்கா... இன்னிக்கு எம்புட்டு மாமூலு குடுத்த?”

“தோ பார்றா. நான் என்னா பூவுக்கு அடியில பான்பராக்கா வச்சினுகிறேன்.

# பட்டாணி சுண்டேல்...”



● படங்கள் : ராஜன்

மாமூலு தர்றதுக்கு. அந்த மாதிரி பொம்பளகிட்ட கேட்டா, கரீட்டா எவ்ளோன்னு வெவரம் சொல்லும். ஏங்கையில கேட்டா...?''னு சிடுசிடுத்துட்டு நகர, அடுத்ததா சைக்கிள்ல வச்சு டீ விக்கிறவர்கிட்ட போயி,

''அண்ணே... ஒரு டீ குடுண்ணே''ன்னு கேட்டேன்.

அதுக்கு அவரு... ''என்னா... தொயிலுக்குப் புதுசா. யாவாரிகிட்டயே இன்னொரு யாவாரம் பண்றது இன்னிக்குத்தான்டா...''

''ஏண்ணே. இங்க தொழில் பண்றது ரொம்பக் கஷ்டமாமே...''ன்னு நைஸா ஒரு பிட்டைப் போட்டேன். அதுக்கு அவரு, ''நாம தொழில் செய்ய ஒண்ணும் பிரச்னையில்ல. ஆனா இங்க வர்ற லவ்வருங்க, கல்யாணமானவங்ககிட்ட அப்பப்போ கும்பலா வந்து பந்தைத் தூக்கி மேல எறிஞ்சு, தண்ணி பாக்கெட்டை பீய்ச்சு அடிச்சு ரௌடிப்பசங்க வம்பு வளப்பானுங்க. நாம அதைக் கண்டுக்காம இருக்கணும். இல்லன்னா இங்க தொழில் செய்றது சிரமம்'' என்று கிளம்பினார்.

**வ**ர்ற வழியில அடையாறு ஆவின் பார்க்குல செம கூட்டம். என்னவா இருக்கும்னு உள்ளே போனா, குட்டீஸ்ங்களை சுதந்திர தினம் கொண்டாட வச்சிருக்காங்க. எப்படித் தெரியுமா? பார்க் பூரா குட்டீஸ் விளையாடறதுக்கு டாய்ஸ், ராட்சத பலூன், ராட்டினம், சறுக்கு மரம்... அது இதுன்னு ஏக அமர்க்களம். இதெல்லாம் பத்தாதுன்னு ஒரு ஸ்டால் போட்டு, அதுல மூணு பேரை உட்கார வைச்சு, அவங்களை குட்டீஸுங்க கையில மெஹந்தி போட வைச்சுருக்காங்க. அதுங்களும் அழகா மெகந்தி போட்டுக்கிட்டு, சூப்பரா ஃபோட்டோவுக்கு போஸ் கொடுக்கறாங்க பாருங்க. ஒரு பொடிசுகிட்ட போய், ''சுதந்திர தினம்னா என்னப்பா...?'' என்றோம்.

''ம்.. ஆகஸ்டு ஃபிப்டீன்த் அன்னிக்கு வர்ற ஹாலிடே...'' என்று பளிச் பதில் வந்தது... அப்படிப்போடு!

- ஒற்றன்

# "நான் பைத்தியமில்லை!"

அந்த மூக்கு நீள மனிதர் இலேசுப்பட்டவரல்ல. எனவே, கொஞ்ச நேரங் கழித்து மறுபடியும் "தங்களுக்கு அண்ணன் தம்பிகள் யாரேனும் உண்டா?'' என்று கேட்டார்.

"உண்டு என்றுதான் நினைக்கிறேன். ஆனால் நிச்சயமாய்ச் சொல்வதற்கில்லை. உண்மை என்னவென்றால், நன்றாக ஞாபகமில்லை" என்றேன்.

"இதைப்போன்ற அதிசயத்தை நான் கேட்டதேயில்லை" என்றார் மூக்கர்.

"ஓஹோ! எந்த விதத்தில் இது அதிசயமாகத் தோன்றுகிறது?'' என்றேன்.

"சற்று முன்னால் உங்களுக்கு ஒரு தம்பி உண்டென்றும், அவன் மகாமகத்துக்குப் போயிருந்ததாகவும் சொன்னீர்களே!"

"ஆமாம் ஸார்! ஆமாம். நல்ல வேளை ஞாபகப்படுத்தினீர்கள். மிக்க வந்தனம். ஒரு தம்பி இருந்தான். அவன் பெயர் இன்னாச்சிமுத்து. அந்தப் பெயரைச் சொன்னாலே எனக்குத் துக்கம் நெஞ்சை அடைத்துக் கொண்டு போகும். அதனால் தான் மறந்துவிட்டேன்."

''ஐயோ பாவம்! செத்துப் போனானாக்கும்!"

"அதுதானே, ஸார். நிச்சயம் தெரியவில்லை! ஏன் கேட்கிறீர்கள்? பெரிய மர்மமாக அல்லவா நேர்ந்து போயிற்று?"

"மர்மம் என்ன? ஆளே அகப்படவில்லையோ?"

"அப்படித்தான் சொல்ல வேண்டும். சுடுகாட்டில் புதைத்துவிட்டு வந்தோம். அப்புறம்..."

"இதென்ன கூத்து? செத்துப் போனது நிச்சயம் தெரியாமலே புதைத்துவிட்டீர்களா?"

''சீச்சீ! அப்படியல்ல. செத்துப் போனது சர்வ நிச்சயம். உம்மைப்போல் இப்படி யாராவது கேட்கப் போகிறார்களென்றெண்ணித்தான் டாக்டர் சர்டிபிகேட்டை வாங்கி வைத்திருக்கிறோம்."

"செத்துப் போனது நிச்சயம். புதைத்தது நிச்சயம். பின்னர் இதில் மர்மம் என்ன?"

"ஆ! அதுதான் விஷயம். செத்துப் போனதும் புதைத்ததும் நிச்சயந்தான். ஆனால் யார் செத்துப் போனது, யாரைப் புதைத்தது என்பதுதான் மர்மம். நன்றாகக் கவனித்துக் கேளுங்கள். நானும் இன்னாச்சி முத்துவும் இரட்டைப் பிள்ளைகள். நாங்கள் மூன்று வயதுக் குழந்தைகளாயிருந்தபோது சேர்ந்தாற்போல் குளத்தில் விழுந்து விட்டோம். இரண்டு குழந்தைகளில் ஒன்று செத்துப் போயிற்று. செத்துப் போனது யார் என்று நிச்சயமாக இதுவரை கண்டு பிடிக்கவில்லை. சிலர் இன்னாச்சி என்றார்கள்; சிலர் நான் என்கிறார்கள்."

"தங்கள் பெயர் என்ன?"

"பார்த்தீரா? நீர் புத்திசாலியென்றல்லவா நினைத்தேன்? செத்துப் போனது இன்னாரென்று தெரியாதபோது, என் பெயர் இதுவென்று நான் எப்படிச் சொல்வது? இருந்தாலும் இந்த மர்மத்தைக் கண்டுபிடிக்க ஒரு துப்பு எனக்கு அகப்பட்டது. இதுவரை ஒரு பிராணியிடமும் அதை நான் வெளியிட்டதில்லை. உம்மிடந்தான் முதன் முதலாகச் சொல்கிறேன். இரட்டைக் குழந்தைகளில் ஒன்றின் இடது தோளில் பெரிய மச்சம் ஒன்றிருந்தது. அந்தக் குழந்தைதான் முழுகி இறந்து போயிற்று."

''அப்படியானால் அதில் மர்மம்



# அமரர் கல்கி

ஒன்றுமில்லையே?"

"முழுவதும் சொல்வதற்குள் அவசரப் படுகிறீரே! அந்தப் பெரிய மச்சம் என்னுடைய இடது தோளில் இருக்கிறது; இப்போது என்ன சொல்கிறீர்?"

"ஒன்று நீர் பைத்தியமாயிருக்க வேண்டும்; அல்லது நான் பைத்தியமாயிருக்க வேண்டும்."

"நான் பைத்தியமில்லை. உம்மைப் பற்றி எனக்குத் தெரியாது. ஆனால், மேற்படி சம்பவத்தில் எல்லாவற்றிலும் அதிசயமான விஷயத்தை நீர் கேட்க வில்லையே? இன்னாச்சியைப் புதைப் பதற்கு எல்லா ஏற்பாடும் தயாராயிருந்த போது, அங்கே வசித்த ஒரு மயில் தன் இனிய குரலை எடுத்துக் கூவிற்று. உடனே இன்னாச்சி சட்டென்று எழுந்து, 'இரண்டு இறகு கேட்டு வாங்கிக் கொண்டு வருகிறேன்' என்பதாக அந்த மயிலைத் துரத்திக் கொண்டு ஓட்டம் பிடித்தான். எல்லோரும் ஏமாந்து போனோம்."

இதற்குள் தஞ்சாவூர் ஸ்டேஷன் வந்தது. அந்த நன்றி கெட்ட சி.ஐ.டி.காரன் ஒரு 'குட் மார்னிங்' கூடச் சொல்லாமல் எழுந்து போனான். அன்றைய தினம் அவன் என்ன 'டைரி' எழுதினான் என்று பார்க்க எனக்கு எவ்வளவோ ஆவல் உண்டு. இந்த ஜன்மத்தில் அது கைகூடாது என்றே நினைக்கிறேன். நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

- அமரர் கல்கியின்
'அதிர்ஷ்ட கவசம்' நூலிலிருந்து
- வானதி பதிப்பகம்

ஒரு பணக்காரரும், ஒரு திருடனும் தனியாக கூப்பே ரயில் பெட்டியில் பயணம் செய்த கதையை சொல்லிக் கொண்டிருந்தேனல்லவா?

இரவில் பணக்காரர் நிம்மதியாகத் தூங்கினார். திருடனுக்கோ தூக்கமே வரவில்லை. தன் கண்ணெதிரே பணக்காரர் எண்ணிய பணத்தை, அப்படி எங்கே ரகசியமாய் ஒளித்து வைத்திருப்பார்? அவரது பெட்டி, பைகளைச் சலித்துப் பார்த்தும் பணம் அகப்படவில்லையே! பணம் எப்படி மாயமானது? கேள்விகள் இரவு முழுக்க திருடனின் மனதைக் குடைந்தெடுத்தன.

பொழுது விடிந்தது. எழுந்தவுடன் பணக்காரர் திருட்டு ஆசாமியிடம், "பயணம் சௌகரியமாக இருந்ததா? நன்றாகத் தூங்கினீர்களா?" என்று ரொம்ப சகஜமான குரலில், உரிமையுடன் கேட்டார்.

"சே! ஒரு நல்ல மனிதரின் பணத்தைத் திருட நினைத்தோமே!" என்று வெட்கப்பட்டான் திருடன். அவரது கைகளை இறுகப்பிடித்துக் கொண்டு "ஐயா! நான் ஒரு திருடன். உங்கள் பணத்தைத் திருடும் நோக்கத்துடன் தான் இதே பெட்டியில் நானும் ரயில் ஏறினேன்" என்று ஆரம்பித்து தன்னைப் பற்றிச் சொல்லி, மன்னிப்புக் கோரினான்.

"மனம் திருந்தியவர்களை ஆண்டவன் ஒரு போதும் தண்டிப்பதில்லை; ஆண்டவன் அருள் உனக்கு எப்போதும் உண்டு" என்று சொன்னார் அந்தப் பணக்காரர்.

திருட்டு நோக்கத்துக்காக மன்னிப்புக் கேட்டு விட்டாலும் கூட, 'அத்தனை பணத்தையும், அந்தப் பணக்காரர் அப்படி எங்கே ஒளித்து வைத்திருப்பார்?' என்று ஒரே குறுகுறுப்பு.

நேரிடையாகக் கேட்டே விட்டான்.

அவர் பலமாய்ச் சிரித்துவிட்டு, தன் இருக்கையை விட்டு எழுந்தார். திருடன் படுத்திருந்த படுக்கை அருகில் வந்து, அதில் இருந்த தலையணையை எடுத்தார். அதனுள்ளே கைவிட்டு, வெளியில் எடுத்தால், கை நிறையப் பணம்!

ஆச்சரியம், அதிர்ச்சி எல்லாம் கலந்து ஸ்தம்பித்துப் போனான் திருடன். "என் தலையணைக்குக் கீழேயே அத்தனை பணமும் இரவு முழுக்க இருந்திருக்கிறது; அது தெரியாமல், பணக்காரரின் பெட்டி, பை என்று எல்லா இடங்களிலும் தேடியிருக்கிறேனே!" என்று தனது அறியாமையை எண்ணி தலையில் அடித்துக் கொண்டான்!

உலகில் பல மனிதர்கள், ரயில் திருடனைப் போன்றுதான் இன்று வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்!

திருடன், தலையணைக்குள்ளேயே



பணம் இருக்க, ரயில் பெட்டி முழுக்கத் தேடினான். பணம் கிடைக்காமல் ஏமாந்து போனான்.

எங்கே மன நிம்மதி கிடைக்கும் என்று வெளியில் எங்கெங்கோ தேடிக் கொண்டிருக்கிறார்கள்! ஆனால் பாவம்! அவர்களுக்கெல்லாம், மன நிம்மதி வெளியில் எங்கும் இல்லை... அவர்களுக்குள்ளேயே இருக்கிறது என்று தெரியவில்லை.

ஆண்டவன் மனிதனைப் படைக்கிறபோது அவனுக்கு புத்திசாலித்தனத்தையும் கொடுத்திருக்கிறான். அந்த புத்திசாலித்தனத்தைப் பயன்படுத்தி வாழ்க்கையை அணுகுங்கள். அலசி, ஆராய்ந்து பாருங்கள். வெற்றிக்கான இலக்கணங்களை வரையறுத்துக் கொள்ளுங்கள். வியூகங்களை வகுத்துக் கொள்ளுங்கள். வெற்றிப் பயணத்தைத் தொடங்குங்கள். இலக்கை நோக்கி வீரநடை போடுங்கள். ஆனால், மனத்திருப்தியையும், மகிழ்ச்சியையும் அதற்கு விலையாகக் கொடுத்து விடாதீர்கள். மனத் திருப்தியை விலையாகக் கொடுத்துவிட்டால் சன்னியாசம் கூட நிம்மதியைத் தராது. ஆரம்பத்தில் சொன்னேனே... துறவுக்கு முயற்சி செய்வது எந்தப் பிரச்னைக்கும் தீர்வாக முடியாது என்று... துறவிகள் வாழ்க்கையிலும் போராட்டங்கள் வருவது



சுனந்தாஜி

# வெற்றியின் விலை என்ன?

# புள்ளி விவரப் புலி!



உலகில் மொத்தம் 2700 விதமான மொழிகளும், 7000 விதமான வட்டார மொழிகளும் வழக்கத்தில் உள்ளன. ஆப்பிரிக்காவில் மட்டும் 1000 மொழிகள் பேசப்படுகின்றன. இருப்பதிலேயே மிகவும் கடினமான மொழி பாஸ்க் (Basque). ஸ்பெயின் மற்றும் பிரான்சின் மூலைகளில் இந்த மொழி பேசப்படுகிறது. சோமாலியாவுக்கு தனிச் சிறப்பு உண்டு. இங்கு மட்டும் தான் மக்கள் அனைவரும் ஒரே மொழியை உபயோகிக் கின்றனர். அந்த மொழி சோமாலி.

நிம்மதியைத் தொலைப்பதால்தான்! துறவு என்பது பிற விஷயங்களுக்குத் திறவுகோல் ஆக முடியாது... அவ்வாறு நினைக்கப்படும்போதுதான் சிக்கல் எழுகிறது.

கீதையில் சொல்லப்பட்டிருக்கும் வழி மிகவும் எளிமையானது. அனைவராலும் மிகவும் சுலபமாகக் கடைப்பிடிக்கக் கூடியது. இது தெரியாததாலும், தெரிந்திருந்தும் கடைப்பிடிக்காததாலும் தான், உலகம் முழுவதும் மன அழுத்தத்தில் துவண்டுபோய், அதிலிருந்து விடுபட்டு, மன அமைதி கிடைக்குமா என்று ஏங்குகிறது.

உலகம் முழுவதும் நிர்வாகவியலில் ஸ்ட்ரெஸ் மேனேஜ்மென்ட்டுக்கு அதீத முக்கியத்துவம் தரப்படுகிறது. பல நிறுவனங்கள் தங்கள் ஊழியர்களின் மன அழுத்தப் பிரச்னைக்கு மருந்து தேடி, கோடிக்கணக்கான டாலர்களை இதற்காகவே செலவழிக்கின்றன.

நண்பர்களே! உங்களுக்கு ஒரு உண்மையை நான் தெளிவு படுத்த விரும்புகிறேன். மன அழுத்தத்தை, நிர்வாகவியல் பயிற்சிகள் மூலம் முழுமையாக வென்று விடுவது சாத்தியமில்லை.

"எப்படி இருக்கிறீர்கள்?" என்று ஒரு சிலரிடம் கேட்டால் "ஓ! மகிழ்ச்சியாக இருக்கிறேன்! மன நிம்மதியோடு வாழ்கிறேன்!" என்று சொல்வார்கள். ஆனால், அவர்கள், அடுத்தவர்களின் கேள்விக்கு பதில் சொல்லுவது ஒருபுறமிருக்கட்டும்; அவர்கள் தமக்குத்தாமே இந்தக் கேள்வியைக் கேட்டுக் கொள்ளட்டும்... மற்றவர்களுக்குச் சொல்கிற பதிலை, தங்களுக்குத் தாங்களே சொல்லிக் கொள்வார்களா?

(வெற்றி தொடரும்)

படம்: ஸ்ரீஹரி

# வட்டமேஜை

## பிரியமாய் ஒரு வரி!

✉ கிருஷ்ணா ஸ்வீட்ஸின் ஜெயித்த கதை மைசூர்பா போலவே தித்தித்தது. ஆனால் கடைசி வரை மைசூர்பா ரகசியத்தைச் சொல்லாமலேயே நழுவி விட்டாரே!
ஈரோடு, டி. சந்திரன்

✉ 'கற்பழிப்பு'க்குப் 'பாலியல் பலாத்காரம்' என்ற வார்த்தை பொருத்தமானதே. அதைவிடச் சிறப்பானது, இலங்கைத் தமிழர்களிடையே புழக்கத்திலிருக்கும் 'பாலியல் வல்லுறவு' என்ற வார்த்தை.
ஈரோடு, சி. நாச்சிமுத்து




✉ வெளிநாடு சென்று வந்தவர்கள் பண்ணும் அலம்பலை அப்படியே உரித்துக் காட்டியுள்ளது 'ஹே டண்டபாணி ஷாப்டாச்சா?'. சபாஷ்!
சென்னை, ஸ்ரயா

✉ 'பட்டிக்காரன் பட்டி ரயில்வே கேட்' பரிசுக்கதை அருமை. ஆறுமுகம் வேலை இழந்தாலும், மனிதாபிமானம் என்னும் மகுடத்தைச் சூட்டிக் கொள்கிறான். மனம் நெகிழ்ந்தது.
செல்வபுரம், என். சீதாலக்ஷ்மி

✉ அருமையான தலையங்கம். இன்றைய அரசு இயந்திரங்கள், இயற்கைச் சீற்றங்களைச் சமாளிக்கப் போதுமான திறனும், பயிற்சியும் பெற்றிருக்க வேண்டியது மிக அவசியம்.
மணியக்காரன்பாளையம்,
ஏ.ஜி. கல்யாணசுந்தரம்

✉ இந்த இதழ் கால்நடைச் சிறப்பிதழா? நாய், குரங்கு, கழுதை பற்றி எழுதி அசத்தி விட்டீர்களே!
அவிநாசி, ச.மணிபாலன்

✉ 'பிரியசகி' விமர்சனத்தில் 'பட்டிக்காடா, பட்டணமா?' திரைப்படத்தின் நகல்தான் என்பதை ஒரு வரி எழுதியிருக்கலாம்!
நெய்வேலி, சாந்தி சுந்தர்

✉ கல்லூரிக்குச் செல்வது படிப்பதற்காகத்தானே தவிர, பந்தா காட்டுவதற்கல்ல. உடைகள், கண்ணியம் காக்க என்று நினைக்கட்டுமே, கட்டுப்பாடு என்று ஏன் நினைக்க வேண்டும்?
மதுரை, என். பாலகிருஷ்ணன்

✉ என் குருநாதர் எம். பாலமுரளி கிருஷ்ணாவின் பிறந்த நாள் நிகழ்ச்சி பற்றிய கட்டுரையைப் படித்து மகிழ்ந்தேன். தொடக்கத்தில் 'அம்மா ஆனந்த தாயினி' என்ற வர்ணத்துக்கு விளக்கமளித்தது நான். கட்டுரையிலுள்ளவாறு 'அறிவிப்பாளினி' அல்ல. பாலமுரளி கிருஷ்ணாவின் முதற் சீடர் நானல்ல; நான் அப்படிக் கூறவுமில்லை; தமிழகத்திலிருந்து அவரிடம் சீடனாக அமைந்த பெருமைக்குரியவன் நான் என்றுதான் கூறினேன்.
தஞ்சாவூர், பி.எம். சுந்தரம்

✉ மஞ்சள் நிறப் பூவுடன் மங்களகரமாக மலர்ந்திருந்த சுஜாதாஜி தொடர் ஆரம்பமே வெகு அமர்க்களம்.
ஊஞ்சவேலாம்பட்டி, டி. பசுபதி

✉ சொந்தக் கொல்லை கத்திரி' அபாரச் சுவை! கட்டுரையையும் கதை போல இவ்வளவு சுவையாக எழுத கல்கியால் மட்டுமே முடியும்.
மயிலாடுதுறை,
சின்னஞ்சிறுகோபு



**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 2005ல் ஆறுதல் பரிசு ரூ. 2,000 பெற்ற கதை**

**வா**சலில் இராவுத்தரின் மோட்டார் சைக்கிளின் சத்தம் கேட்டது. அது வரை அயர்ந்து கிடந்த குருவம்மா கிழவி திடுக்கிட்டு விழித்துக் கொண்டாள். சுற்றிலும் இருள் கவிழ்ந்து கிடந்தது. திக்கென்று நெஞ்சை ஏதோ அடைத்துக் கொண்டது மாதிரி இருந்தது. இன்றைக்குப் பொழுது முழுவதும் இப்படியே படுத்துக் கிடந்திருப்பதை நினைத்து "நாதியத்துப் போன உசுரு போனாக் கூட, ஊர் உலகத்துக்குத் தெரியாமத்தான் அழுகி நாறிக் கிடக்கணும் போல" என்று வருந்தினாள்.

வெங்காயக் கடை இராவுத்தர் என்றால் மார்க்கெட்டில் மிகவும் பிரபலம். அவரது பெயர் கரீம் சுல்தான். ஆனால் அங்கு யாரைக் கேட்டாலும் இராவுத்தர் என்றால்தான் தெரியும். முறுக்கிவிடப்பட்ட மீசை, அரைகுறை நரையோடு தலைமுடி, போலீஸ்காரர் போல் இருக்கும் தோற்றம்.



காலூன்றியபடி உரக்கக் கத்தினார்.

"ஏய் கிழவி, என்ன பண்ற...?"

அதற்குமேல் கிழவியால் படுத்துக் கிடக்க முடியவில்லை.

நிதானமாக எழுந்து வந்து குடிசையின் வாசல் கதவைத் திறந்தாள். நரைத்த தலைமுடியை அள்ளி முடிந்தபடி, வாசலில் மங்கலான வெளிச்சத்தில் நின்ற இராவுத்தரை உற்றுக் கவனித்தாள். ஏற்கெனவே காய்ச்சல் கண்ட உடம்பென்பதால், அவரைப் பார்த்ததும் மேலும் தடதடத்துப் போனாள். கண்டாங்கி முந்தானையால் சுருக்கம் கண்ட தன் முகத்தை அழுந்தத் துடைத்துவிட்டு

# நித்திய ஜீவிதம்

நின்றாள்.

"ஏங்கெழவி இன்னிக்கு வேலைக்கு வரலை? வெள்ளிக்கிழமை சந்தை பொழப்பு எப்படியிருக்குமுன்னு தெரியாதா? திமிரு கொண்டு ஆடுறியா?"

தொண்டை நரம்புகள் புடைத்து நிற்க கத்தித் தீர்த்தார் இராவுத்தர். தலை குனிந்தபடி நின்றாள் கிழவி. இராவுத்தர் விருட்டென்று வண்டியை ஆவேசமாய்க் கிளப்பிப் போய்விட்டார். இராவுத்தர் திட்டுவது கிழவிக்குப் புதிதில்லை.



"வேறு எங்காவது வேலைக்குப் போயேன் குருவம்மா" பக்கத்துக்கடை இளசுகளும், பெருசுகளும் கூட அவளிடம் உரிமையோடு கடிந்து கொள்ளும்.

"சரியான பேயாட்டம் ஆடற மனுஷன். அவருகிட்ட குப்பை கொட்டுறியே, உன்னைத்தவிர வேறு யாரும் இந்த ஆளிடம் வேலைக்கு இருக்க முடியாது." என்று ஏறத்தாழ எல்லா நாக்குகளுமே மார்க்கெட்டில் சொல்லியாயிற்று.

கிழவிக்கு என்ன குணாதிசயமென்று யாராலும் கண்டு பிடிக்க முடியாது. ரொம்பவும் அமைதியாகவே காணப்படுவாள். எல்லோர் சொல்வதையும் கூர்ந்து கவனிப்பாள். ஆனால் எந்தவிதமான மாற்றமும் இருக்காது, அவளது முகத்தில். அழுத்தம் திருத்தமாக யாராவது அவளிடம் அன்போடு கடிந்து கொண்டால், ஒரு புன்னகைக் கீற்று ஓடி மறையும்.

இன்று, தான் செய்தது ஒரு விதத்தில் தப்பு என்று தோன்றியது கிழவிக்கு. 'யாரிடமும் சொல்லியனுப்ப வழியில்லாமல் போனதால், கைவாகுக்கு தன்னையே எதிர்பார்த்து இருந்துவிட்டு இன்றைக்கு

சூர்யா சுரேஷ்

முழுவதும் சந்தையில் அல்லல் பட்டுப் போய் வந்ததில், யாராக இருந்தாலும் இப்படித்தான் திட்டத் தோணும்.

தேற்றிக் கொண்ட மனதோடு 'கால் படி புழுங்கல் அரிசியை கஞ்சியாய் காய்ச்சிக் குடிச்சுட்டு படுத்தாக்க மார்க்கெட் வியாபாரத்திற்கு விடி காலையில் எழுந்து போகலாம்' என்று முடிவு செய்தவளாக பெருமூச்சு விட்ட படி குடிசைக்குள் போனாள்.

கிணறு வெட்டப் போன இடத்தில் மண் சரிந்து கணவனும் மகனும் இறந்து விட, ஒரே நொடியில் அநாதை ஆனவள் தான் குருவம்மா. இந்த ஊருக்கு அனாதை யாய் வந்தபோது, அனாவசியமாய் எந்த வொரு கேள்வியும் கேட்காமல் இராவுத் தர் தன்னை வேலைக்குச் சேர்த்துக் கொண்ட அந்த நன்றியுணர்வு, மனசுக் குள் நெகிழ்ந்ததொரு புள்ளியாய் எப்போ தும் அவளை பொறுமை காக்கச் செய்யும்.

"இருய்யா, நீயும் என்னைப் புரிந்து கொள்ளும் காலம் வரும்' என்று மனசுக் குள் சொல்லிக் கொள்வாள்.

வாரமானால் சம்பளம் கொடுப்பார் இராவுத்தர். சந்தையிலேயே வாரத்துக்குத் தேவையான அரிசி, பருப்பை வாங்கிக் கொள்வாள். காய்கறிகள் அக்கம்பக்கத்தில் ஓசியாகவே கிடைத்துவிடும். தோல் ஒதுக்கிப் புடைக்கும்போது குப்பைக் குள் கிடக்கும் ஒன் றிரண்டு வெங் காயங்களை எடுத்துக் கொள் வாள். இராவுத்தர் பார்த்தாலும் அதற் காக எதுவும் சொல்வதில்லை. அதுவே அவளுக்கு மிகப் பெரிய சந்தோஷமாய் இருக்கும்.

அன்று அமாவாசை. மார்க்கெட்டில் சூடு பறந்தது வியாபாரம். வழக்கமான இரைச்சல் இன்றைக்கு அதிகப்படியாகத் தெரிந்தது.

வாடிக்கைக்காரர்களிடம் சிரித்தபடி வெங்காயம் எடைபோட்டபடி உற்சாக மாய் இருந்தார் இராவுத்தர். தொடர்ச்சி யாய் வரும் வாடிக்கைக்காரர்களில் ஒரு சிலர், கிழவியிடம் குசலம் விசாரித்துப்பேசி விட்டுப் போவார்கள். மனசுக்குள் சந் தோஷமாய் இருக்கும் அவளுக்கு. அதிகப் படியாய் யாரிடமும் பேசிவிட மாட்டாள். இராவுத்தர் திட்டுவார் என்கிற பயம் எப்போதும் இருக்கும்.

கூட்டம் வடிந்திருந்த நேரம் பார்த்து, கிழவியிடம் இராவுத்தர் பேச்சுக் கொடுத் தார்.

"ஏங்கெழவி நேத்து அப்படிப் பண் ணிட்ட...?"

குனிந்தபடி வெங்காயம் பொறுக்கிப் போட்டபடி பதில் சொன்னாள்.

"ஒடம்புக்கு முடியலை. யாருட்ட யாவது சொல்லியனுப்ப விதியத்துப் போச்சு. தத்துகுத்தி வேலைக்கு வந்து நோவு அதிகமாயிப் போச்சுன்னா, உங் களுக்குத்தான் சிரமம் அதிகமுன்னு இருந்துட் டேன்."

"சரி... நான்தான் நேத்து சாயங்காலம் வியாபாரம் முடிஞ்சு வந்தேனுல்ல, அப்பவே சொல்லியிருக்கலா முல்ல? ஏதாவது மருந்து மாத்திரை வாங்கித் தந் திருப்பேனுல்ல."

"நீங்களே வேகங் கண்டு பேசினீங்க. அதான் மேலும் எதுவும் பேச வேண்டா முன்னுட்டு இருந்துட்டேன்."

கொஞ்ச நேரம் அவளையே பார்த்து விட்டு வியாபாரத்தில் மூழ்கினார். அவ ருக்குள் ஒருவிதமான பெருமிதம் இருந்தது. சில நேரங்களில் வியாபார நெருக்கடியில் கிழவியை அளவுக்கதிகமாகத் திட்டியிருப் பதையும் ஆவேசத்தில் அவள் தலையில்



"அர்ஜுனா! போர்க்களத்திலிருந்து ஏன் திரும்பி வந்துவிட்டாய்..?"
"ஏதோ ஞாபகத்தில் வில்லுக்குப் பதிலாக செல்லை எடுத்துக் கொண்டு போய் விட்டேன் அண்ணா!"
- லீலாஜி

குட்டு வைத்ததையும் நினைக்கும்போது கொஞ்சம் மனசுக்குக் கஷ்டமாக இருந்தது. முதலாளி என்றால் இப்படித்தான் இருக்கவேண்டுமென்கிற ஆளுமை நீங்காமல் இருந்தது அவரிடம்.

வியாபாரம் பரபரப்பாய் இருந்த நேரத்தில், இராவுத்தருக்கு இலேசாகக் கண்ணை இருட்டியது. யாரோ தன்னைப் பிடித்துக் கீழே தள்ளி விடுவதைப் போல இருந்தது. கப்பென்று நெஞ்சை அடைத்தது. நிதானமற்றவராய் தரையில் சரிந்து விழுந்தார்.

"ஐயோ! என் ராசாவைப் பாருங்களேன்..."

அடிவயிற்றில் இருந்து கோரமாய்க் கத்தினாள். அக்கம்பக்கத்துக் கடைக்காரர்கள் அவசர அவசரமாக வியாபாரத்தைப் போட்டுவிட்டு, இராவுத்தரைத் தூக்கி ஆட்டோவில் போட்டு பெரிய ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போனார்கள்.



"இன்னும் கொஞ்ச நேரம் இருந்திருக்கக் கூடாதா... செல்வியைப் பார்க்காமலேயே போயிட்டியே பாட்டி!"
"செல்விங்கிறது இலங்க பேத்தியா?"
"இல்லை...'சீரியல்!'"
- ராம் ஆதிநாராயணன்

பெரிய ஆஸ்பத்திரி மிகுந்த பரபரப்பாகிப்போனது. மருத்துவர்கள் ஏதேதோ செய்து கொண்டிருந்தனர். அவசர சிகிச்சைப் பிரிவில் அனுமதிக்கப்பட்டிருந்தார். ஓட்டமும் நடையுமாக ஆஸ்பத்திரிக்கு வந்துவிட்டிருந்தாள் கிழவி. எல்லா தெய்வங்களையும் வேண்டியபடி நின்றாள்.

இராவுத்தரின் வீட்டுக்குத் தகவல் தெரிந்து, மனைவியும் இன்னும் சில சொந்தங்களும் அழுதபடி வார்டுக்குள் வந்தார்கள். எல்லோரையும் பேந்தப் பேந்த பார்த்தாள் கிழவி.

அவசர கதியில் இயங்கிய மருத்துவர்கள், இருபத்து நான்கு மணி நேரக் கெடு சொல்லியிருந்தார்கள்.

கிழவி, இராவுத்தரை வைத்திருந்த வார்டின் வெளிப்பகுதியில், அடர்ந்து வளர்ந்திருந்த மரத்தடியில் எதையோ தொலைத்தவளாய் ஸ்தம்பித்து உட்கார்ந்து கிடந்தாள்.

யார் சொல்லியும் கிழவி பச்சைத் தண்ணீர்கூடக் குடிக்கவில்லை.

''என்னோட ராசா இராவுத்தர் எழுந்திருக்கட்டும், நான் சாப்பிடுறேன்''

அவள் முகமெங்கும் பெரும் சோகமொன்று அப்பிக்கிடந்தது. இராவுத்தரின் மனைவி வந்து சொல்லியும், எதையும் சாப்பிட மறுத்து விட்டாள் கிழவி. அப்புறம் யாரும் கண்டுகொள்ளவில்லை அவளை.

மருத்துவர்கள் சொன்ன நேரத்துக்கு முன்பாகவே விழித்துக் கொண்டார் இராவுத்தர். பெருமூச்சு விட்டனர் குடும்பமும், சுற்றமும். விழித்து அவர் சகஜ நிலையை அடைந்தவுடன் எல்லோரும் அவரிடம் சொன்னது, கிழவி இருக்கும் உண்ணாவிரதத்தைப் பற்றித்தான். உடனே அவளைப் பார்க்க ஆசைப்பட்டார் இராவுத்தர். மரத்தடியில் விக்கித்து உட்கார்ந்திருந்த கிழவியை கைத்தாங்கலாக அழைத்துப் போனார் அவரது மனைவி.

இராவுத்தரைப் பார்த்தவுடன் அடைபட்டு போன மூச்சு திரும்ப வந்தது போல பெருமூச்சுவிட்டாள் கிழவி. செத்துப்போன தன் மகனையே பார்த்தது போல் இருந்தது அவளுக்கு. அவரது அருகில் போய் நின்றாள். கை, கால்கள் நடுங்கிக் கொண்டிருந்தன. சுருக்கம் கண்ட தோல் போர்த்திய கைகளால், இராவுத்தரின் முகம் வருடிப் பார்த்தாள். அவரது தலைமுடியைக் கோதி ஸ்பரிசித்தாள். அவளுக்குத் தன் மகனின் ஞாபகம் மீண்டும் வந்தது.

"ஏய்யா, உனக்கு ஒன்னுமில்லையே!" என்ற அவளின் தழுதழுத்த குரலில் இவ்

வளவு காலம் தன்மீது பாசம் வைத்திருந்த ஒரு ஜீவனை ரொம்பவும் படுத்திவிட்டதாய் நெருடியது மனது. அடக்க முடியாமல் விம்மிய உணர்வின் கசிவுகளாய், இலேசாகக் கண்கள் கலங்கின அவருக்கு.

தன் இடுப்பில் கிடந்த சுருக்குப் பையைத் துழாவி எடுத்தாள் கிழவி.




இராவுத்தரைச் சுற்றி நின்ற மொத்தக் கூட்டமும் அதனைக் கவனித்தது. கண்களை மேலே செருகியபடி அண்ணாந்து பார்த்த வண்ணம் கிழவி ஏதோ முணுமுணுத்து விட்டு, "ஏங்குல தெய்வம் ஐயனாருச்சாமி உன்னை எப்போதும் கைவிட்டுடாது ராசா" என்று ஆஸ்பத்திரி வார்டுக்கே கேட்கும்படி கம்பீரமாக உரக்கக் கத்திவிட்டு, தன் விரலின் நுனியில் இருந்த திருநீறை இராவுத்தரின் நெற்றியில் அழுத்திப் பூசிவிட்டாள்.

கிழவியின் கைகள் நடுக்கம் கண்டிருந்ததாலும், மின் விசிறி ஓடிக் கொண்டிருந்தாலும், இராவுத்தரின் முகத்தில் கொஞ்சம் இப்பி இப்பியாய் சிதறிவிட்டிருந்தது திருநீரு.

அவ்வளவு நடுக்கத்திலும் மிக பவ்யமாகக் குனிந்து, தன் வாய் குவித்து ஊதி விட்டாள் கிழவி.

முகத்தில் பட்டவுடன் இனம் புரியாத நேசத்தைச் சுமந்து வந்த அந்தக் காற்று இராவுத்தருக்கு மிகவும் இதமாய் இருந்தது.

"நீ போய் சாப்பிடு" என்று கிழவியிடம் கனிவுடன் சொன்னார் இராவுத்தர்.

கைத்தாங்கலாக வெளியில் கூட்டிப் போனார்கள் அவளை. டீயும் பன்னும் வாங்கி வரச் சொல்லி விட்டு, லாகவமாக தன் கண்டாங்கி முந்தானையை காற்றில் உதறி விட்டு, பெருமூச்சுவிட்ட அதே மரத்தடியில் உட்கார்ந்தாள் கிழவி.

**மி**க நெருங்கிய சொந்தங்களும், பள்ளி வாசலில் இருந்து சில முக்கிய மானவர்களும் வந்திருந்தார்கள். அதில் ஒருவர் இராவுத்தர் குணமாக வேண்டுமென முணுமுணுத்தபடி துவா செய்து கொண்டிருந்தார்.

எல்லோரும் இராவுத்தரின் நெற்றியையே கவனித்தார்கள். அவரது மனைவி முக்காடின் முந்தானையால் திருநீறைத் துடைக்க வந்தாள். மிக நிதானமாக அவளை தீர்க்கமாகப் பார்த்துவிட்டு, துடைக்க வந்த கைகளைத் தடுத்தார் அவர்.

அவரது பார்வை ஜன்னலின் வழியே மரத்தடியில் குந்திட்டு உட்கார்ந்திருந்த கிழவியை நோக்கித் திரும்பியது. குருவம்மா உட்கார்ந்திருப்பது, மறைந்த தன் தாய் ஜீனத்தம்மாள் உட்கார்ந்திருப்பது போலவே இருந்தது அவரது கண்களுக்கு. ●





# இருப்பு வெள்ளி!

**பா**துகாப்புக்கு நூறு கமாண்டோக்கள். எனினும் இலங்கை வெளியுறவுத் துறை அமைச்சர் கதிர்காமர், கொலை செய்யப்பட் டிருக்கிறார்.

நீச்சல் பயிற்சியை முடித்துவிட்டுக் கிளம்பிய போது மீண்டும் குளித் திருக்கிறார் - ரத்தத்தில். தலையில் இரண்டு குண் டுகள்; கழுத்தில் ஒன்று, வயிற்றில் ஒன்று என்று மொத்தம் நான்கு குண் டுகள். உடனடியாக தேசிய மருத்துவமனைக் குக் கொண்டு செல்லப் பட்ட கதிர்காமர், டாக் டர்கள் ஆபரேஷன் செய்து குண்டுகளை எடுக்க முயற்சி செய்தது பலனளிக்காமல் இறந்து போனார்.

சொல்லப் போனால், "இலங்கைப் பிரதமர் நேற்று படுகொலை செய்யப்பட்டார்" என்று தான் ஆகஸ்ட் 12ம் தேதி நாளிதழ்களில் செய்தி வெளியாகி இருக்க வேண்டும். சமீபத்தில் நடந்த பாராளுமன்றத் தேர்தலில் கதிர்காமர்தான் பிரதமராகத் தேர்வு செய்யப்படுவார் என்று எதிர் பார்க்கப்பட்டது. ஆனால் ராஜபக்ஷே பிரதமராகி விட்டார். காரணம், புத்த பிட்சுக்களின் கடும் எதிர்ப்பு.

எதற்காக கதிர்காமர் பிரதமராவதை புத்த பிட்சுக்கள் எதிர்க்க வேண்டும்? கதிர்காமர் இந்திய





வம்சாவளியைச் சேர்ந்தவர். தமிழ்க் கிறிஸ்தவர். போதாதா?

இந்த மரணத்தின்மூலம் இலங்கை மீண்டும் தன் வழக்கமான 'போர்க்கால' உடையை அணிந்திருக்கிறது. பதற்றம், அவசரநிலைப் பிரகடனம், உள்நாட்டுக் கலவரங்களுக்கான வாய்ப்பு என்று அங்கு அடுத்த சுற்று ஆரம்பமாகிவிட்டது.

மறைந்த கதிர்காமர், இலங்கை ஜனாதிபதி சந்திரிகாவுக்கு நெருக்கமானவர். அதனாலேயே புலிகளின் கடும் எதிரி. தவிர, தங்கள் அமைப்பின் மீது உலக அளவில் தடை விதிக்கப்பட்டதில் கதிர்காமருக்கு முக்கியப் பங்கு உண்டு என் பதில் புலிகளுக்கு ஆக்ரோஷம் (பிற நாடுகளில் இயங்கும் தீவிரவாதிகள் இயக்கம்' என்ற அமெரிக்காவின் பட்டியலில், விடுதலைப்புலிகள் இயக்கத்தையும் இணைத்ததில் கதிர்காமருக்குப் பெரும் பங்கு உண்டு)

விடுதலைப்புலிகளின் 'விடுதலை அளிக்க வேண்டியவர்களின்' பட்டியலில் இரண்டாவது இடம் கதிர்காமருக்கு இருந்திருந்தால் வியப்பில்லை! (சந்திரிகாவுக்கு முதலிடம்)

இந்தக் கொலையின் பின்னணியில் தாங்கள் இல்லை என்று கூறியிருக்கிறது விடுதலைப்புலிகள் இயக்கம். கூடவே "இலங்கை அரசுக்குள் அதிகார மோதல் உண்டு. ராணுவத்தில் ஒரு பகுதியே இப்போது அரசுக்கு எதிராக உள்ளது. அப்புறம் ஏன் எங்களை சந்தேகிக்க வேண்டும்?" என்று கேட்டிருக்கிறது. ஒப்புக் கொள்ளலாம், சில ஃப்ளாஷ்பேக்குகள் நினைவுக்கு வராவிட்டால்.

**1993**ல் அப்போதைய ஜனாதிபதி பிரேமதாஸாவை வெடிகுண்டு மூலம் கொன்றது இவர்கள்தான் என்பதும், ராஜீவ்காந்தி படுகொலையிலும் தங்கள் பங்கை புலிகள் ஒப்புக் கொண்டதில்லை என்பதும் கடந்தகால நிகழ்வுகள்.

போதாக்குறைக்கு சமீபத்தில் பிரபல தொலைக்காட்சி மற்றும் வானொலி நிகழ்ச்சித் தொகுப்பாளரான ரேலங்கி செல்வராஜாவும், அவரது கணவரும் துப்பாக்கி குண்டுகளுக்கு இரையாகியிருக்கிறார்கள். இவர்கள் இருவருமே மற்றொரு தமிழர் இயக்கமான PLOTE-ன் உறுப்பினர்கள். புலிகள் இயக்கம் தங்களை மட்டுமே தமிழர்களின் பிரதிநிதியாக அனைவரும் கருத வேண்டும் என்கிற எண்ணம் கொண்டது என்பதனால், இக் கொலைகளிலும் புலிகளின் பங்கு இருப்பதாக சந்தேகப்படுகிறது. எதிர்வீட்டின் குளியலறையில் கொலையாளி(கள்) ஒளிந்துகொண்டு, துப்பாக்கியால் சுட்டிருப்பது விசாரணையில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. அவர்கள் தங்கியிருந்த இடத்திலிருந்து இரண்டு சயனைடு குப்பிகளும் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

இது தவிர, இன்னும் சில முக்கியத்

## காதலைக் கொடு!

பத்துப் பொருத்தம் பார்த்து
அடியெடுத்து வைத்த
மணவாழ்க்கையில்
ஆணுக்குச் சமமாய் சம்பாதித்து
திசைக்கு ஒருவராகச் சென்று
திரும்பி வரும் மாலை வேளையில்
தினப் பொருத்தம் இல்லாமல்
மாவு அரைக்க கிரைண்டர்
சாம்பார் பொடி அரைக்க மிக்ஸி
துணி துவைக்க வாஷிங்மிஷின்
இவற்றோடு
இயந்திரமாகிப் போன மனசுக்கு
நின்றுகொண்டே சாப்பிட்டு
கம்யூட்டரிலே காலத்தைக் காசாக்கி
கணவனும், மனைவியும்...

காதலை திரும்பக் கேட்கிறார்கள்
இன்னொஸென்ட் டைவர்சியில்
இன்னொரு துணைக்குக் கொடுப்பதற்கு!

\- ஜெயந்தி சிவகுமார்



தகவல்களும் வெளியாகியிருக்கின்றன. விடுதலைப்புலிகளுக்கு ஆதரவான 'ஈழநாதம்' பத்திரிகையில், கதிர்காமர் சுட்டுக்கொலை செய்யப்பட்ட அன்று கதிர்காமரை 'தமிழ்த்துரோகி' என்று வர்ணித்து, அவர் உயிர் வாழத் தகுதி அற்றவர் என்று குறிப்பிட்டு ஒரு கட்டுரை வெளியானது. அதேபோல் புலிகளின் ஹிட் லிஸ்ட்டில், இன்னொரு தமிழ் அமைச்சரான டக்ளஸ் தேவானந்தாவும் இடம் பெற்றிருப்பது தெரிய வந்துள்ளது.

லட்சுமணன் கதிர்காமர் யாழ்ப்பாணத்தில் மணிபே என்ற ஊரில் பிறந்தவர். தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட கிருஸ்தவர் என்றாலும், பௌத்த சமயத்தின் மீது மதிப்பும், ஈடுபாடும் கொண்டவர். கண்டியில் திரினிடி கல்லூரியில் சட்டப் படிப்பை முடித்தவர். அடுத்து ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் சேர்ந்து படித்தபோது, மாணவர் இயக்கங்களில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தார். பாரிஸ்டர் பட்டம் பெற்று, லண்டனிலும், ஸ்ரீலங்காவிலும் பணியாற்றியிருக்கிறார். ஜெனிவாவில் உள்ள ஐ.நா. தொழிலாளர் அமைப்பில், ஆலோசகராகவும் இருந்திருக்கிறார்.

கதிர்காமருக்கு கிரிக்கெட் ரொம்பப் பிடிக்கும். கல்லூரி நாட்களில் பல்கலைக் கழக அணியில் இடம் பெற்று ஆடி இருக்கிறார். அவர் ஒரு அதலெட்டும்கூட. தடை ஓட்டத்தில் பல்கலைக் கழக சாம்பியன். சமீபத்தில் நடந்த மூன்று நாடுகள் கிரிக்கெட் ஆட்டத்தை மைதானத்துக்குச் சென்று பார்த்து ரசிக்க விரும்பினார். ஆனால் பாதுகாப்புக் காரணங்களால் போக முடியவில்லை.

ஜெனிவாவில் உள்ள சர்வதேசத் தொழிலாளர் அமைப்பில்கூட ஆலோசகராக இருந்தார். 2003ல் காமன்வெல்த் அமைப்பின் பொதுச்செயலாளராகப் போட்டியிட்டார். அதில் வென்றிருந்தால் அவரது தலையெழுத்து மாறியிருக்கலாம்.

கதிர்காமரின் முதல் மனைவி மூலம் பிறந்த ராகி, அஜிதா ஆகியோருக்கும், அவரது இரண்டாவது மனைவி சுகந்திக்கும் ஆறுதல் கூறியிருக்கிறார் சந்திரிகா.

கதிர்காமரின் இறப்பினால் என்ன விளைவுகள்? உடனடி விளைவு இதுதான். இஸ்லாமாபாதில் தொடங்கவிருந்த வெளியுறவு அமைச்சர் மாநாடு இதனால் ஒத்தி வைக்கப்பட்டது.

சந்திரிகாவுடன் விடுதலைப்புலி இயக்கமும் இணைந்து, இலங்கையில் சுனாமி நிவாரணப் பணியில் ஈடுபடுவதை இந்தியா ஆதரித்தது. இனி இந்த நிவாரணப் பணிகள் இதேமுறையில் நடைபெறுமா? சந்தேகம்தான்.

இப்போது சந்திரிகா பேச்சுவார்த்தைகளுக்குப் புதிய ஷரத்துக்களைப் போடுவார். புலிகள் இயக்கம் இதனை எதிர்க்கும். ஆக இலங்கையில் இன்னல்கள் இப்போதைக்குத் தீரப் போவதில்லை.

எழுபத்திமூன்று வயதில் ஒருவர் இறப்பது அதிர்ச்சியானதில்லை. ஆனால் கதிர்காமர் இறந்தவிதமும், அது மீண்டும் இலங்கையிலுள்ள அப்பாவி மக்களின், முக்கியமாகத் தமிழர்களின் - வாழ்வைக் கேள்விக் குறியாக்கியுள்ளதும்தான் சோகம்.

**- ஜி.எஸ்.எஸ், மௌலி**

## மெடிக்கல் மூலை

முதல்முறையாக தமிழகத்தில் புற்றுநோயைக் கண்டறிய உதவும் 'மைக்ரோ அர்ரே' எனும் கருவியை அடையாறு புற்றுநோய் மருத்துவமனை அறிமுகப்படுத்தியுள்ளது. இந்தப் புதிய கருவி புற்றுநோய்க்கான 40,000 ஜீன்களை ஒரே நேரத்தில் கண்டுபிடிக்குமாம்.



சன்டே சமையல்!

# ஐஸ்க்ரீம்

"**கா**லைல லேட்டா எழுந்திருக்கறதுதான் என்னோட சன்டே ஸ்பெஷல்... அதைவிட என்ன சந்தோஷம் வேணும் சொல்லுங்க...?" என்று கேட்டுச் சிரிக்கிறார் பிரபல கார்ட்டூனிஸ்ட் மதி. நாம் சென்றபோது பையன் நரேனுக்கு ஐஸ்கிரீமுக்குப் பதிலாக, ஜூஸ் கொடுக்கப் போராடிக் கொண்டிருந்தனர் மதி-காந்திமதி தம்பதி.

"எங்க வீட்ல சன்டே அன்னிக்கு காலைல நோ டிபன்... வெறும் காபி பிஸ்கட்டோட நிறுத்திடுவோம். ஆனா அது ரொம்ப லைட்டா இருக்கும்ல...? அதனால சன்டே லஞ்ச் பதினொரு மணிக்கெல்லாம் முடிஞ்சுடும்" என்று புன்னகை செய்யும் மதியிடம், "சன்டே என்ன லஞ்ச் செய்வீங்க?" என்றோம்.

"மோஸ்ட்லி வெரைட்டி ரைஸ்தான் செய்வேன். குறிப்பா மாங்காய் சாதம், எலுமிச்சை சாதம், தக்காளி சாதம், உளுந்தம்பருப்பு சாதம்... இதுல எதாவது ஒண்ணும், தயிர் சாதமும் செய்வோம். இந்த உளுந்தம் பருப்பு சாதம் மட்டும் கொஞ்சம் வித்தியாசமா இருக்கும்" என்றபடி உற்சாகமாக ரெசிபி சொன்னார் காந்திமதி.

"ஒரு தம்ளர் அரிசி, கறுப்பு உளுந்தம்பருப்பு கால் தம்ளர், வெந்தயம் அரை டீஸ்பூன், பூண்டு 15 பல்லு எடுத்துக்கணும். அரிசியைக் களைஞ்சி வச்சிட்டு, வாணல்ல உளுந்தம் பருப்பு, வெந்தயத்தை வறுத்துட்டு, அரிசியில் உளுந்தை மிக்ஸ் பண்ணிடணும். இப்போ அதோட பூண்டையும் சேர்த்து குக்கர்ல வேக வச்சிடணும். அடுப்பை சிம்ல வச்சி 20 நிமிடம் வேக விட்டா உளுந்தம்பருப்பு சாதம் ரெடி."

"இதுக்கு சைடு டிஷ் என்னன்னு நான் சொல்றேன்" மதி.

"காய்ஞ்ச மிளகாய் போட்டு செய்த தேங்காய்த் துவையலை இந்த சாதத்துல போட்டு, நல்லெண்ணெய் விட்டு, பிசைஞ்சி சாப்பிட்டா...

## ஜுரமாக்காமலே சாப்பிடலாம்!



**சாந்தி பல்ராமின்
இந்த வார டிஷ்:
வெள்ளரிக்காய் கோஸுமல்லி**

***தேவையான பொருள்கள்:***

வெள்ளரிக்காய் - 2 கப் பொடியாக நறுக்கியது.
பாசிப்பருப்பு - ½ கப்,
உப்பு - தேவையான அளவு
நறுக்கிய கொத்தமல்லி - அலங்கரிக்க

***தாளிக்க:*** கடுகு - ½ தேக்கரண்டி
உ.பருப்பு - 1 தேக்கரண்டி
ப. மிளகாய் - 2
கறிவேப்பிலை - சிறிது

***செய்முறை:*** பாசிப்பருப்பை 15 நிமிடம் ஊறவைக்கவும். பின்னர் தண்ணீரை வடித்து விட்டு, வெள்ளரிக்காய், தேவையான உப்பு சேர்த்து கலந்து, நறுக்கிய கொத்தமல்லியால் அலங்கரித்து பரிமாறவும். விருப்பப்பட்டால் தாளித்துக் கொட்டவும்.



படம்: ஸ்ரீஹரி

# தயிர்சாதம்!

ஆஹா!" என்று சிலாகிக்க,

சன்டே எங்க வீடு குப்பை மேடு... அதனால பையனும், ஒய்ஃபும் மதியம் தூங்கறப்போ நான் கொஞ்சம் வீட்டை



க்ளீன் பண்ணுவேன். இட்ஸ் ஜஸ்ட் டைம்பாஸ்" என்கிறார் மதி.

"நாலு மணிக்கு ரெண்டு பேரும் முழிச்சுடுவோம். அப்போ டிபனா ரவா இல்ல சேமியா உப்புமா செய்து தருவேன். சன்டே ஈவ்னிங் மட்டும் அவனுக்கு நூடுல்ஸ் செய்து தருவேன். அப்புறம் எல்லா சன்டேவும் எங்க வீட்ல உப்புமா கிடையாது. அப்பப்போ கண்டலும் செய்வோம்"- இது காந்திமதி.

"அப்போ டின்னர் ஹோட்டல்ல தானா...?"

"நோ... நோ... சான்ஸே இல்ல. வீட்ல தான் டின்னர். ஆனா அதுவும் தோசை, இட்லியாத்தான் இருக்கும். நரேனுக்கு மட்டும் தயிர் சாதம் நானே பிரிப்பேர் பண்ணி ஊட்டி விடுவேன். அதுக்கு அவன் வச்சிருக்கிற பேரே ஐஸ்க்ரீம் தயிர்சாதம்" என்ற மதியிடம், "எப்படிச் செய்வீங்க...?" என்றதற்கு, இலேசான வெட்கத்துடன் மனைவியைப் பார்க்க,

"பெரிய ஜப்பான் ஃபார்முலா ஒண்ணுமில்லிங்க... ஜில்லுன்னு தயிரை எடுத்து, சாதத்துல அதிகமா போட்டு, நல்லா நொறுங்க பிசைஞ்சி தருவாரு... அது ஜில்லுன்னு ஸ்வீட்டா இருக்கும். அதைத்தான் இப்படி பேரெல்லாம் வச்சு சொல்றாங்க" என்றபடி சிரிக்கிறார் காந்திமதி.

- முத்து

படம்: ராஜன்

## சின்னான் செய்திகள்

'கற்பனை என்றாலும் கற்சிலை என்றாலும் கந்தனே உனை மறவேன்.' 'மாதாவின் கோவிலில் மணி தீபம் ஏற்றினேன்.' 'நீ இல்லாத இடமே இல்லை, நீதானே உலகின் எல்லை, அல்லா! அல்லா!' இப்படித்தான் பக்திப் பரவசத்தை நம்ம மேல தெளிச்சுவிட்டு ஆரம்பிச்சாங்க ஷோ காட்ட! ஆமாங்க, போனவாரம் 'என்றென்றும் வாலி'ன்னு நம்ம கண்ணதாசன் அறக்கட்டளை + ராஜ் டீ.வி. நடத்துன ஷோவுக்குப் போயிருந்தேன். வார்த்தைகளில் சொல்லி அடிக்கிற வாலிக்கு ராஜ் டீ.வி. ஷோ நடத்துனாலும், திரையுலகம் தள்ளி நின்னு பார்க்காம, திரண்டு (!) வந்து செம கில்லியா நடத்திப்புட்டாங்க!

கங்கை அமரன் குழுவின்ருக்கு அதிகமா வாலி பாடல்களைப் பாட முடியாத அளவுக்கு, பேச கூட்டம் கூடிடுச்சு. இருந்தாலும் கிடைச்ச சென்டி மீட்டர் கேப்புல தன்னோட வழக்கமான சேஷ்டைகளைத் திணிச்சு சந்தோஷப்பட்டுக்கிட்டாரு கங்கை அமரன்!

"வாலிபம் எழுதும் வம்பன். நீ கம்ப்யூட்டர் காலத்துக் கம்பன்"னு வாலிக்கே வரி வுட்டாரு நிகழ்ச்சித் தொகுப்பாளரு பா.விஜய். வாலி ஒருபடி மேல போயி ''பா.விஜய்தான் என் எழுத்துலக வாரிசு''ன்னு அறிவிச்சு அசத்திப்புட்டாரு.

வாலி அப்படீங்கிற 'வற்றாத கவிதைக் கிணறு' பத்தி, எல்லாரும் 'வாளி'யா இறச்சு ஊத்துனாங்க. அதுல இருந்து கொஞ்சம் தீர்த்தம்!

**ஏவி.எம். சரவணன்** : வாலிக்கு மட்டும் என்னன்னு தெரியல், வயசு 20லேயே ஸ்டாக் ஆயிடுச்சு! ஒருமுறை இளையராஜா 'ஒரு வரியை கொஞ்சம் மாத்திக்கவா'ன்னு வாலிகிட்ட கேட்க, 'நீ என்ன வேணா மாத்திக்கோ, ஆனா என்னை மட்டும் மாத்திராதே'ன்னு சொன்னவரு வாலி!

**எஸ்.ஏ.சந்திரசேகர்** : அதிகமா

# பேடூக்கேத்த

'அம்மா' பாடல்களை எழுதியவரு வாலி அய்யாதான். இப்ப என் பையன் விஜய்க்கு எழுதுறவரு, என் பேரன் சஞ்ஜய்க்கும் பாட்டு எழுதுவாரு!

**ஏ.எல்.அழகப்பன்** : கொடுப்பதை வாங்கிக் கொண்டு பாட்டெழுதுற கவிஞர். பணத்துக்காக டார்ச்சர் பண்ண மாட்டாரு.

**நாகேஷ்** : என்னை மாதிரி, ஸ்ரீரங்க ரங்கநாதன் வாலி மாதிரி, சினிமா உலகத்துல பைசா பாக்கி இல்லாம வசூல் பண்ணுறவன் எவனுமே கிடையாது. எனக்கு பணம் வராட்டி, டப்பிங் அன்னிக்கி தொண்டை கட்டிய மாதிரி நடிப்பேன். தானா காசு வரும். வாலியும் அப்படித்தான். பணத்தை வைச்சாத்தான் வேலையே நடக்கும். இதுக்கு முன்னாடி யாரோ பேசுனாங்களே, அதெல்லாம் பொய்!

**பாரதிராஜா** : தமிழ்த்திரையுலகம் செய்யாததை, பாலசந்தருக்கு எடுத்த மாதிரியே விழா எடுத்து ராஜ் டீ.வி. செய்துள்ளது. சினிமாக்காரர்கள் (!) ஒப்பனை மனிதர்கள். அவர்கள் பேச்சில் எனக்கு உடன்பாடு கிடையாது. இந்த விழாவோட அழைப்பிதழில் பாராட்டுரை நடிகர், நடிகை

* கமல்ஹாசன் - இளையராஜா





* வாலி

# குரங்கு புத்தி!

கள்னு மட்டும் போட்டிருக்காங்க! அவங்க நம்பிக்கை வீண் போகாத படி, நிறைய நடிகர்கள் வந்திருக் காங்க. ஆனா ஒரு நடிகைகூட இல்ல. ஒரு பொம்பளைகூடவா திரையுலகத்துல இல்லன்னு நினைச் சேன். அப்புறம்தான் தோணுச்சு. இங்க வந்திருக்கிற 'ஆச்சி'யை விட, வேற யார் பெரிய நடிகைன்னு!

**இளையராஜா** : பாடலாசிரி யருக்கு ஒரு சந்தத்துக்கு எந்த வார்த்தைகளைப் போட வேண்டும் என்பதை விட, எந்தெந்த வார்த்தை களைப் போடக்கூடாது என தெரிய வேண்டும். அதைத் தெரிந்தவர் வாலி!

**கமலஹாசன்** : வாலி அய்யா தாடி வைச்ச குழந்தை. அதுல தொங்கி விளையாண்ட குரங்கு நான். அவரு நல்ல ஓவியர்னு பலருக்குத் தெரியாது. எனக்குத்தான் கணக்கு, ஓவியம் ரெண்டுலயும் ஒரே உருவம்தான் கிடைக்கும், கோழிமுட்டை! இந்த விழாவை ஒரு ஒத்திகையா வைச்சுக் கலாம். இன்னும் பத்து வருஷம் கழிச்சுக் கூட அவருக்கு விழா எடுக்கலாம். ஒண்ணும் அவசரமேயில்லை.

சூர்யா, எஸ்.ஜே.சூர்யா ஒரு பக்கம் இளமை களைகட்ட, மைக்கைப் புடிச்ச பாக்யராஜ் செம மொக்கை போட் டாருங்க! அப்புறம், 'ராஜ' சகோதரர்கள் கவிஞருக்கு 100 பவுன் பொற்காசுகள் கொடுத்து கௌரவிச்சாங்க.

லாஸ்ட்ல பேசுன வாலி ஏராளமா 'பஞ்ச்' வுட்டாரு.

"வாலிங்கிற பேருக்கேத்தாப்ல நிறைய குரங்கு புத்தி எனக்கு உண்டு. மும்பை எக்ஸ்பிரஸ் படத்துக்கு பாட்டெழுத, நான் கடுமையா சார்ஜ் பண்ணுனேன். அதை மனசுல வைச்சுக் காம கமல் வந்து பாராட்டு நாரு. நிறையப் பேர்கிட்ட கெட்ட பேர் வாங்கி இருக்கேன். ஆனா யாரும் மனசுல வைச்சுக்கல. அப்ப எனக்கும், கண்ணதாச னுக்கும் போட்டி இருந்துச்சு,



* சூர்யா - பாக்யராஜ்

பொறாமை இருந்ததே கிடையாது. "நான் செத்தா நீதான் எனக்கு பாட்டெழுதணும்'னு கண்ணதாசன் சொன்னாரு. இரங்கற்பா எழுதுனேன். ரெண்டே வரிதான். 'எழுதப் படிக்கத் தெரியாத எத்தனையோ பேர்களில் எமனும் ஒருவன். அழகிய கவிதைப் புத்தகத்தைக் கிழித்து விட்டான்!' இப்ப எனக்கு கிடைச்ச பாராட்டெல் லாம் எனக்கு எம்.எஸ்.வி. போட்ட பிச்சை!"

இந்த பூமிப்பந்தின் ஆசிர்வதிக்கப்பட்ட இடங்களில் தலைசிறந்தது எதுவென, இளைஞர்களையும், யுவதிகளையும் கேட்டுப்பாருங்கள்! "கல்லூரி" என்று இதயம் கனக்க உச்சரிப்பார்கள். இப்போதும் லயோலா கல்லூரியைக் கடந்து போக நேரும் அந்தச் சில கணங்களில், ஒரு புத்தம் புது மாணவனைப் போன்ற பரவசம் என்னைப் பற்றிக் கொள்ளும். வனாகம் எங்கும் சாமரம் வீசும் பூமரங்கள். சுட்டெரிக்கும் கோடையிலும் இங்கே மாமரக் குயில்கள் கூவிப்பாடும். பழகிய பாதைகள் நிறைந்த ஓர் ஆரண்யம் போல, பசுமை போர்த்திக் கிடக்கும் கல்லூரியின் பின்புறம், வண்ணத் துப்பூச்சிகள் தவமிருக்கும் ரயில் தண்டவாளம்.

பாண்டிபஜாரில் 47-G பேருந்தில் ஏறினால், பத்து நிமிடத்தில் கல்லூரி. உள்ளே நுழைந்ததுமே உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் பூங்கா. நடுவே புனிதர் இக்னேசியஸ் லயோலாவின் கருணை வழியும் சிலை. பின்னணியில் கம்பீரமாய் பிரதானக் கட்டடம். இடப் பக்கம் திரும்பி, நெட்டிலிங்க மரங்களின் அணிவகுப்பிற்கு நடுவே நடந்தால், இருநூறு ஆண்டுகள் அமைதியை அடைகாத்துக் கொண்டிருக்கும் கலையழகு பொழியும் தேவாலயம். இன்னும் கொஞ்சம் நடந்தால், இந்தியாவெங்கும் மதிக்கப்படும் லயோலா மேலாண்மை கல்விக் கூடம்.



# கனவுகள்




அணிந்திருக்கும் வெள்ளை அங்கிக்கு உள்ளே, கள்ளம் கபடமற்ற வெள்ளை உள்ளம். ஒவ்வொரு மாணவனையும் தனித்தனியே தட்டிக் கொடுத்து, தன்னம்பிக்கை ஊட்டும் இயேசு சபைத் துறவிகள். இவர்களால் நடத்தப்படும் கண்ணியம் மிகுந்த இந்தக் கல்லூரியில் நான் காலடி வைப்பேன் என்று கனவிலும் நினைக்கவில்லை. பிளஸ் டூ முடித்தபோது மேல்நிலைப்பள்ளியில் எனது சீனியர் மாணவரான ராஜ்குமார், லயோலாவில் பி.காம் படித்துக் கொண்டிருந்தார். 'இங்கே பி.காம் நன்றாக இருக்கும் வா' என்று அறிவுரை சொல்லி அழைத்தார். 72% மதிப்பெண்கள் எடுத்திருந்ததால், அச்சம் எதுவுமில்லாமல் அப்ளை பண்ணினேன். கல்லூரியிலிருந்து அடுத்த சில தினங்களிலேயே அழைப்பு! உற்சாகம் பீறிட அப்பாவை அழைத்துக் கொண்டு ஓடினேன்.

பிரின்ஸ்பால், அப்பாவைக் கூப்பிட்டு உட்காரச் சொன்னார். அவர் பக்கத்தில் நான் பவ்யமாக நின்று கொண்டேன். "உங்களைக் கூப்பிட்டு அனுப்பிச்சது, உங்க பையனுக்கு அட்மிஷன் தர்றதுக்காக இல்லை. எதுக்கு ஒரு சீட்டை வீணாக்குறீங்கன்னு கேட்கத்தான். இங்கே வந்து படிச்ச நடிகர்கள், அரசியல்வாதிகளின் பையன்கள் யாரும் டிகிரி முடிச்சதா சரித்திரமே கிடையாது. எவ்வளவோ மெரிட் ஸ்டூடண்ட்ஸ் இருக்காங்க. அவங்களுக்கு இந்த சீட்டைக் கொடுக்கலாம்" என்றபோது, எனக்கு மொத்த உற்சாகமும் சப்பென்று வடிந்து விட்டது. "என் மகன் கண்டிப்பாக டிகிரியை முடிப்பான். நான் உத்திரவாதம் தருகிறேன்" என்று அப்பா வாதாடிப் பார்த்தார். பிரின்ஸிபாலோ, "பார்க்கலாம், போயிட்டுவாங்க" என்று அனுப்பிவிட்டார். சீட் இல்லையென்றால் எதற்கு இப்படி நேரில் கூப்பிட்டுச் சொல்ல வேண்டும் என்று எனக்கு உள்ளூரக் கோபம். அன்று இரவு முழுக்க தூக்கம் வரவில்லை. மறுநாள் காலை பதினொரு மணி வரை அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்த என்னை அடித்து எழுப்பிய அப்பா, ஒரு கடிதத்தைக் கொடுத்தார்.

"கடினமான திரைத்துறையில் நீங்கள் சம்பாதித்திருக்கும் நற்பெயருக்காகவும்,



# பயிலும் காலம்...

உங்கள் மகன் பெற்ற மதிப்பெண்களுக்காகவும் அட்மிஷன் தருகிறோம்" என்று பிரின்ஸ்பாலிடமிருந்து கடிதம்! எனக்கு இருப்புக் கொள்ளவில்லை.

கல்லூரிக்குள் நுழையப் போகிறோம் என்பதை நினைக்க நினைக்க, விலாப்புறங்களில் சிறகுகள் முளைப்பது போல் சந்தோஷவலி. முதல்நாள் வகுப்பிற்கு அப்பாவின் காரில் புறப்பட்டுப் போய், கல்லூரிக்குக் கொஞ்சம் முன்பாகவே இறங்கி கொண்டேன். வாகன இரைச்சலை மீறி, காதுகளை எட்டிய என் இதயத் துடிப்பைக் கேட்டபடி, படபடப்போடு கல்லூரியின் உள்ளே நடந்தேன். எல்லாம் புது முகங்கள். முதல் நாளே வந்து வணிகவியல் துறை எந்த திசையில் இருக்கிறது என்பதைப் பார்த்து வைத்துவிட்டதால், பிரச்னை எதுவுமில்லாமல் முதலாண்டு வகுப்பிற்குள் அடியெடுத்து வைத்தேன். எனக்கு முன்பே நிறையப் பேர் வந்துவிட்டார்கள். இத்தனை நாள் கடைசி பெஞ்சில் அமர்ந்து பழகி விட்டோம். இனி அப்படி இருக்கக் கூடாது என்று எண்ணிக் கொண்டே, முதல் வரிசையில் போய் அமர்ந்தேன் ஐந்து நிமிடம் கூட ஆகியிருக்காது. பின்புறமாக என் தோளைத் தொட்டது ஒரு கை. "டேய், நீ ஒழுங்குப் பிள்ளையால்லாம் இருக்க வேண்டாம். எங்ககூட கடைசி வரிசைக்கு வா" என்று அதட்டியவர் யாரென்று திரும்பிப் பார்த்தால், எனது பள்ளி நண்பரின் தம்பி ராம்குமார். அங்கே அறிந்த முகம் அவர் மட்டும் தான். என் பள்ளியிலிருந்து யாருமே இங்கே வரவில்லை.

அறிமுகப்படலத்திலேயே முதல் நாள் வகுப்பு முடிந்து, போரில் வெற்றிபெற்ற ஒரு வீரனின் வெற்றிக்களிப்போடு வகுப்பறையை விட்டு வெளியே வந்தேன்.

ஸூர்யாவின் டைரி படித்ததிலிருந்து அவர் எங்கள் குடும்பத்தில் ஒருவராக மாறிவிட்டார். நானும் சிறு வயதில் நன்றாகப் படிக்க மாட்டேன். வாழ்க்கையில் எதுவும் சாதிக்கப் போவதில்லை என்று நினைத்தேன். ஆனால் இன்று ஸூர்யாவின் கதையைப் படித்தபின் நிச்சயம் நானும் ஏதேனும் சாதிக்கவேண்டும் என்ற ஆசை மற்றும் எண்ணம் வந்துவிட்டது.

- எஸ்.ஆர்.சௌமியா, காரைக்குடி

கார் பார்க்கில் எனக்கு ராகிங் காத்திருக்குமென்று தெரியாது. சில சீனியர் மாணவர்களின் அன்புக் கடத்தலில் சிக்கிக் கொண்டு, ஊமைக் கைதிகளைப் போல அவர்கள் காரில் சென்னையை உலா வந்தோம். ரிப்பன் பில்டிங் அருகில் கார்களை நிறுத்தினார்கள். 'ஆஹா! நமக்கு விடுதலை' என்று துள்ளிக் குதித்தால், "ஏய்... இந்தாங்கப்பா, ஒரு ரெட் கலர், ஒரு கிரீன் கலர் ரிப்பன் வாங்கிட்டு இன்னும் பத்து நிமிஷத்துக்குள்ளே வந்துடணும். ஓடு ஓடு. லேட்டாகுற ஒவ்வொரு நிமிஷத்துக்கும் ஃபிகருங்க முன்னாடி ஒரு நர்சரி ரைம் பாடணும்" என்று பத்து ரூபாய்த் தாள்களை எங்கள் கைகளில் திணித்து, முதுகில் செல்லமாய் ஆளுக்கொரு அடி கொடுத்து அனுப்பினார்கள்.

அடப்பாவிகளா! ரைம்ஸ் இருந்து விட்டுப் போகிறது. மாநகராட்சி அலுவலகம் என்ன ஃபேன்ஸி ஸ்டோரா? நொந்து கொண்டே உள்ளே போனால், "டிரெயினேஜ் கம்ப்ளைண்ட் அந்த பக்கம்!" என்று துரத்தினார் ஓர் ஊழியர். ஒரு வழியாக ரிப்பன் கட்டடத்தின் பின்பக்க வாயில் வழியே ஓடி, நேரு ஸ்டேடியத்துக்கு எதிரில் ஒரு ஃபேன்ஸி கடையைக் கண்டுபிடித்து உள்ளே போனோம். அங்கேயிருந்த பெண்மணி "கோர்ன் ஃப்ரெண்டுக்கா?" என்று ஓரக் கண்ணால பார்க்க, அவரிடம் அசடு வழியக் கூட அவகாசமில்லாத அவசரத்தில் ஓடி வந்து ரிப்பன்களைக் கொடுத்தோம். "டேய்... மச்சான்! சின்ன மச்சானுங்க செயிச்சிப்புட்டானுங்கப்போய்" என்று திருநெல்வேலி பாஷை பேசிக் கொண்டே நெற்றியில் ரிப்பன்களைக் கட்டிக் கொண்டு டி.ஆர். பாணியில் பாட ஆரம்பித்தார்கள்.

"சின்ன மச்சான் வாங்கித்தந்த ரிப்பனு
அதை நெத்தியிலே கட்டிகிட்டா
ஸ்டைலு."

"கலக்கீட்டிங்க மச்சிகளா. நாளைக்குப் பார்ப்போம்" என்று சீனியர்கள் விடை பெற்றபோது, எல்லை மீறாத ராகிங், நட்புக்கான பிள்ளையார் சுழிகளில் ஒன்று என புரிந்து போனது.

ஒரு மாத காலம் ஒழுங்காக வகுப்புகளுக்குப் போய்க் கொண்டிருந்தேன். பள்ளிக் கூடத்தின் பாதிப்பிலிருந்து மீள முடியாமல், ஒவ்வொரு பாடத்துக்கும் ஒரு நோட்டு எடுத்துச்



செல்வேன். இரண்டாவது மாதமே எல்லாப் பாடங்களுக்கும் சேர்த்து ஒரு நோட் எடுத்து வர ஆரம்பித்து, மெல்ல மெல்ல அதுவும் நாற்பது பக்கம் நோட்டாக பேண்ட் பாக் கெட்டுக்குள் இடம் பிடித்துக் கொண்டது. கல்லூரிக்கு வந்துவிட்டாலும், நமக்கு உயரம் இல்லை, உடற்கட்டு இல்லை என்ற தாழ்வு மனப்பான்மை இருந்து கொண்டேயிருந் தது. எனது வகுப்பில் இருந்த அத்தனை பேரும், அவர்களது அப்பாக்களின் பெயர் களைச் சொன்னால் சட்டென்று அடை யாளம் தெரிகிற அளவுக்கு வி.ஐ.பிக்களின், தொழிலதிபர்கள் வீட்டுப் பிள்ளைகள். பலர் ஆங்கிலப் படத்தில் பார்க்கிற ஹீரோக் களைப் போல ஹை-ஸ்டைலில் பளிச் சென்று இருப்பார்கள். நான் அவர்களைப் போல இல்லை. அப்பாவை எழச் சொல்லி விட்டு, அந்த நாற்காலியில் உட்காரச் சொல்கிற மாதிரி ஃபேமிலி பிசினஸ் இல்லை. நிறைய உழைக்க வேண்டும். இந்தப் படிப்பை முடித்தவுடன் நாம் என்ன செய் யப் போகிறோம் என்ற குழப்பம் என்னை அடிக்கடி குடைய ஆரம்பித்தது. என்றாலும் கல்லூரியில் கூட்டம் கூட்டமாய்க் கிடைத்த நட்பு வட்டம், பாடத்தோடு கனவுகளையும் பயிலக் கற்றுக் கொடுத்தது.

உயர் தட்டுப் பையன்கள், கிராமத்தி லிருந்து படிப்பை மட்டுமே நம்பி வந்து, அதுதான் வாழ்க்கையைத் தரப்போகிறது என்ற கனவோடு ஹாஸ்டலில் தங்கி, தீவிர மாய்ப் படித்த கீழ்த்தட்டு, நடுத்தரக் குடும்பத் துப் பையன்கள், காதல், கம்யூனிஸம், கவிதை என்று கிரீடத்தோடு சுற்றிக் கொண்டிருந்த பையன்கள் எல்லோரும்

* மாலைக் கல்லூரி முதல்வர் ஃபாதர் அல்போன்ஸுடன்...

பாகுபாடு இல்லாமல் என்னுடன் பழகி னார்கள்.

நடிகரின் மகன் என்றாலும், டிசைனர் ஷாப் சென்று எனக்கு டிரஸ் எடுக்கத் தெரியாது. இப்போதும் எனது உடைகளைத் தேர்வு செய்து தருபவன் என் நண்பன் ராஜாதான். கல்லூரி நாட்களிலோ, யாரும் நமது உடையை விமர்சனம் செய்துவிடக் கூடாதே என்கிற எச்சரிக்கை உணர்வோடு, எளிமையான மெல்லிய வண்ணங்களில் சட்டையும், எல்லா வண்ணங்களுக்கும் மேச் ஆகும் என்று கறுப்பு நிற பேண்ட்டும், கால் களில் ரப்பர் காலணிகளும் அணிந்து போவேன்.

ஒருமுறை சிங்கப்பூரிலிருந்து எனக்கு ஒரு ஹாரா பிராண்ட் ஜீன்ஸும், கட்டம் போட்ட காட்டன் சட்டையும், ஒரு ஜோடி ஸ்போர்ட்ஸ் ஷூவும் வாங்கி வந்திருந்தார் அப்பா. அவற்றை அணிந்து கல்லூரியில் நுழைந்த போது, நண்பர்கள் குரலெடுத்துக் கத்தி விட்டார்கள். ''என்ன மச்சி! இன்னைக்கு உனக்குப் பிறந்தநாளா? சொல்லவே இல்லையே!'' என்று ஆச்சர் யப்பட்டு, கார் பார்க்கில் கேக் வாங்கி வந்து வெட்ட வைத்து விட்டார்கள்.

**உ**டை மொழியிலும், உடல் மொழியிலும் பலவீனமான அப்பாவியாக இருந்த என் மீது ஒரு கள்ளச்சாராய வழக்கு! உபயம்... கல்லூரி நண்பர்கள்!

(டைரியைத் தொடர்வேன்)

படங்கள்: ஸ்ரீஹரி

## நீங்கள் கேட்டவை-தராசு

# டீ.வி.தான் சினிமாவைத் தாங்குகிறதா?





* ஆசை, தோசை...!

● எச்.ஆண்டனி தமிழரசன், மும்பை - 17

? தி.மு.க.விலிருந்து கொண்டு அ.தி.மு.க.வுக்கு வாக்களிப்பவர்கள் தி.மு.க.விலிருந்து விரட்டப்படுவார்கள் என்கிறாரே கருணாநிதி?

! விரட்டப்படுவது ரொம்ப சுலபம். அப்படிப்பட்டவர்கள் ஓடத் தயாராகத்தான் இருப்பார்கள். அதைவிட 'அவர்கள் ஓடவோ மாறவோ ஏன் முற்பட வேண்டும்' என ஆராய்ந்து அந்தக் கோளாறைச் சரி செய்வதுதான் கட்சி கரையாமலிருக்க உதவும்.

● கு. கணேசன், மறைமலைநகர்

? கதிர்காமர் படுகொலைக்கும் எங்களுக்கும் எந்தவித சம்பந்தமும் இல்லை என்கிறதே எல்.டி.டி.ஈ... நம்பலாமா?

! நம்புவது கஷ்டம்தான், நிரூபணம் கிடைக்கும்வரை. ஆனால், கதிர்காமருக்குப் புலிகள் தவிர வேறு அரசியல் விரோதிகளும் உண்டு என்பதும் உண்மையே.

● ஜி.மாரியப்பன், சின்னமனூர்

? இன்று டீ.வி.தான் சினிமாவையே தாங்கிக் கொண்டிருப்பதாக டீ.வி. நடிகர் விஜய் ஆதிராஜ் சொல்வது சரியா...?

! இட்லியைத்தான் திருப்பிப்போட முடியாது; தோசையைத் திருப்பிப் போடலாம். விஜய் ஆதிராஜ் கூறியுள்ளது தோசை!

● டி.முருகேசன், திருவாரூர்

? கல்யாணப் பத்திரிகை போல் மாநாட்டு அழைப்பிதழை அச்சிட்டுள்ளாரே விஜயகாந்த்?

! தொண்டர்கள் மொய் எழுத வேண்டும் என்கிற எதிர்பார்ப்பாக இருக்கலாம்!

● கே.தெய்வசிகாமணி, சென்னை-54

? தமிழக அரசு அதிகாரிகள் பயன்படுத்தி வந்த அம்பாஸிடர் கார்களுக்குப் பதிலாக ஹோண்டா சிட்டி, ஸ்கார்பியோ கார்களை வாங்கலாம் என்று அரசாணை பிறப்பிக்கப்பட்டுள்ளதாமே..?





• கட்சி கல்யாணம்...!



• சகோதரித்துவம்!



• டெக்னிகல் ரேஷன்!

! இதில் யாருக்கு என்ன பெருமை? பல பெரிய நிறுவனங்கள் செய்வதுபோல், தலைமைச் செயலகத்துக்கு எட்டு - பத்து பஸ்கள் வாங்கி, ரூட் நிர்ணயித்து, ஊழியர்களையும் அதிகாரிகளையும் அழைத்து வரவும், வீடு திரும்பவும் வசதி செய்தால், அது சிக்கனம்... புரட்சி! வரிப்பணம் மிச்சமாகும். அந்த மாதிரி நல்ல காரியமெல்லாம் நடக்காதுங்க!

● பி.ஜோதி, சென்னை

**? கவிஞர் வைரமுத்துவை கலைஞர் தவிர்ப்பது போல தெரிகிறதே..?**

! இல்லையே! சன் ஃபவுண்டேஷன் விழாவில் கலைஞர் பக்கத்திலேயே கவிஞர் உட்கார்ந்திருந்தாரே, ரொம்ப நேரத்துக்கு!

● க.நா. இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்

**? செல்போன் எஸ்.எம்.எஸ். சேவையைத் தவறாகப் பயன்படுத்துகிறவர்கள் அதிகரித்து வருவதால், அதை ரத்து செய்தால் என்ன...?**

! செருப்பு கடிப்பதனால் காலையா வெட்டிக் கொள்வோம்! எஸ்.எம்.எஸ்.ஸில் தொந்திரவு கொடுப்போர் குறித்து சைபர் போலீஸில் புகார் கொடுத்துப் பார்க்கலாம். அதன் வசதிகளை இழப்பது அறிவுடைமை யாகாது.

● ஜி.ஜெயராமன், எரவாஞ்சேரி

**? அ.தி.மு.க. அரசு இதுவரை செய்த சாதனைகளில் எது பெரிது...?**

! மக்களின் நம்பிக்கையை எப்படியோ பெற்று ஆட்சிக்கு வந்தது தான். அதன்பிறகு சாதனை என்று குறிப்பிடும்படியாக எதையும் காணோம். ஆட்சியில் இருப்போர் ஆற்ற வேண்டிய சராசரிக் கடமைகள் எல்லாம் சாதனைகள் ஆகிவிடாது.

● கவிதா ராஜேஸ்வரி, எசனை

**? தமிழ் குரோர்பதி எப்படி?... ரசித்தீர்களா?**

! சிலருக்குப் பிடிக்கிறது; பலருக்குக் கடிக்கிறது!

● ஜி.செல்வராஜன், ரிஷிவந்தியம் ❐

**? மண்ணில் மக்களுக்குள் பேதமேற்படுத்தி, அடக்கி ஆண்டு, விண்வெளியில் என்ன டிஸ்கவரி செய்கிறது ஏகவல்லரசு யூ.எஸ்.ஏ.?**

! இங்கே ஏற்படும் கெட்ட பெயரை அங்கே சாதனை காட்டித் துடைத்துக் கொள்ளும் முயற்சியாக இருக்கலாம். ஒரு காலகட்டத்தில் விண்வெளி சாதனைகள் விஞ்ஞான வளர்ச்சிக்கும் பொருளாதார வளர்ச்சிக்கும் பெரிதும் உதவின. இன்று நடப்பவை மார்தட்டிக் கொள்ளத்தான் பெரிதும் பயன்படுகின்றன.

● எஸ்.எஸ். நாராயணன், சென்னை

**? எம்.ஜி.ஆரின் சத்துணவுத் திட்டம்**

? ! ? ! ? ! ? ! ? ! ? ! ? ! ? ! ? ! ? ! ? !



உடல் ஆரோக்கியம் கருதிய திட்டம் (கல்கி 31.7.05 தராசு) என்று கூறியுள்ள அதே கல்கி, அன்று எம்.ஜி.ஆர். இத்திட்டத்தைத் தொடங்கியபோது, 'பெற்றோர்களைச் சோம்பேறிகளாக்கும் திட்டம்' என்று எழுதியதை மறந்தது ஏனோ..?

! பெற்றெடுத்த பிள்ளைகளுக்குப் பொறுப்பேற்பது பெற்றோரின் கடமை. எனவே மதிய உணவுத் திட்டம் இப்போதும் பெற்றோரைச் சோம்பேறிகள் ஆக்குகிறது என்பதில் மாற்றம் இல்லை. ஆனால், எம்.ஜி.ஆர். குழந்தைகளின் ஆரோக்கியம் கருதித்தான் அதைத் தொடர்ந்தார்.

● **எஸ்.முரளி, குறிஞ்சிப்பாடி**

***? தி.மு.க. தலைவர் கருணாநிதி சர்க்கரை வாங்கும் விதமாக ரேஷன் கார்டு பெற்றுள்ளாரே..?***

! காட்டப்பட்ட வருமானத்தின் அடிப்படையில் டெக்னிகலாக அது சரியாய் இருக்கலாம். ஆனால், யோசிச்சா கசக்குது!

● **வி.என்.கோபால், சென்னை-91** ★

***? தமிழக முதல்வர், அந்தக் கால மன்னர்களைப் போல் 'நான் ஆணையிட்டேன்' என்று சொல்கிறாரே... ஜனநாயகப் பண்புடன், 'தமிழக அரசு உத்தரவிட்டுள்ளது' என்று கூறுவது தானே பக்குவமாக இருக்கும்?***

! அதற்குத்தான் 'அன்புச் சகோதரியாகிய நான்' என்று அடைமொழி சேர்த்துக் கொள்கிறாரே... அரசுமில்லே, அரசியலுமில்லே... 'குடும்பம்'னு மக்கள்கிட்டே கெட்டிக்காரத்தனமாக ஒரு மாயையை உருவாக்கிட்டு வர்றாங்க.

● **ஆர்.பேபி ரேகா, குடியாத்தம்**

***? ஆறு மாதங்களுக்கு மேல் ஜாமீனில் வெளிவராத பிடிவாரண்ட் நிலுவையில் இருந்தால், அத்தகையவர்களின் பெயர்களை வாக்காளர் பட்டியலிலிருந்து நீக்குமாறு மாநில அரசுகளுக்குத் தேர்தல் ஆணையம் உத்தரவிட்டுள்ளது குறித்து...?***

! சர்ச்சைக்குரிய உத்தரவுதான். நிரபராதிகள் சிலர் வாக்குரிமை இழப்பார்கள் என்பதும் உண்மை. ஆனால் குண்டர்கள் - குற்றவாளிகள் அரசியலில் புகுந்து ஆபாசப்படுவதை இந்த உத்தரவு கணிசமாகத் தடுக்கும் என்பது பிளஸ் பாயிண்ட்.

● **எம்.அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி**

***? கர்நாடகாவில் பா.ஜ.க.வின் பிளவு எதைக் காட்டுகிறது...?***

! கர்நாடகா மட்டுமல்ல; குஜராத்திலும் பிளவு... தேசிய அளவில் ஆட்சியின் வலிமை ஆட்டம் காணும் என்பதையே இப்பிளவுகள் உணர்த்துகின்றன.

● **கு. அருணாசலம், தென்காசி**

***? தனியார் பொறியியல் கல்லூரிகளில் மாணவர் சேர்க்கை பற்றி சுப்ரீம் கோர்ட் வழங்கியுள்ள பரபரப்புத் தீர்ப்பு...?***

! சட்ட ரீதியாகச் சரி. சமுதாய நோக்கில் சரியில்லை. அதனால்தான் இப்போ சட்டத்தை மாற்ற முயற்சி நடக்குது. அப்படி மாற்றும்போது, ஜாதி அடிப்படையில் மட்டுமில்லாமல், பொருளாதாரத்தில் பின்தங்கியவர்களுக்குச் சில இடங்களை ஒதுக்கி, கட்டணச் சலுகை தரப்பட்டால் சமுதாய நீதி உறுதிப்படும். ஆனா, நம்ம அரசியல்வாதிகள் அப்படி ஒரு நல்ல காரியம் பண்ண மாட்டாங்க! ●

❒ ரூ.100 பரிசு பெறுபவர் :
**ஜி.செல்வராஜன்,**
வெங்கலம்,
ரிஷிவந்தியம் பி.ஒ.,
விழுப்புரம் மா.வ. - 606 205

★ ரூ.50 பரிசு பெறுபவர் :
**வி.என்.கோபால்,**
14, (புது எண்.2),
முதல் குறுக்குத் தெரு,
பாரத் நகர்,
மடிப்பாக்கம் - 600 091.





# விரட்டிப் பிடித்த வீரலட்சுமி!

சென்னை, திருவல்லிக் கேணியில் உள்ள நெசவாளர் தெரு...

கடந்த வாரத்தில் ஒரு காலைப் பொழுது. பிரபல மருத்துவர் பெருமாள் வீட்டுக் கதவு தட்டப்படுகிறது.

டாக்டர் பெருமாள் தூங்கிக் கொண்டிருக்கிறார். அவரது மனைவி செல்வலட்சுமி. 'அவசரமா தட்டுறாங்களே' என்று வேகமாய்த் திறக்கிறார்.

இருபத்தி இரண்டு வயது மதிக்கத்தக்க இளைஞன், பட்டென கையில் மறைத்து வைத்திருந்த இரும்பு பைப்பால் செல்வலட்சுமியின் தலையில் சடார் சடாரென அடிக்கிறான். ஒரு கையால் அவரது கழுத்தில் கிடக்கும் தாலிச் சங்கிலியை இழுக்கிறான்.

சட்டென அவன் அணிந்திருந்த ஜீன்ஸ் சட்டையை கெட்டியாகப் பிடித்துக் கொண்ட செல்வலட்சுமி, பால்கனி பக்கம் நோக்கி "திருடன், திருடன்" என்று அலறுகிறார். சம்பவம் நடப்பது முதல் மாடி என்பதால், தெருவில் சென்று கொண்டிருந்த சிலர் கவனித்துவிடுகிறார்கள்.

அடுத்து நடந்ததை அவரே விளக்குகிறார்– "தங்கச் சங்கிலி அழுத்தமாக இருந்ததால், ஒரு காதில் இருந்த தோட்டைப் பிடுங்கிக்கொண்டு கீழ இறங்கி ஓடினான். தலையிலேருந்து ரத்தம் கொட்டக் கொட்ட பின்னாடியே 'திருடனைப் பிடியுங்க, திருடனைப் பிடியுங்க'ன்னு கத்திக்கிட்டே நானும் ஓடினேன். தெருவில் உள்ளவங்களெல்லாம் அவனை விரட்ட ஆரம்பிச்சாங்க. சத்தம் கேட்டு எழுந்து வந்த என் கணவருக்கு என்ன நடக்குதுன்னே புரியல."

செல்வலட்சுமியின் கணவர் பெருமாள் குறுக்கிட்டுச் சொன்னார்.

"முகமெல்லாம் ரத்தமா பார்த்ததும், முதல்ல ஏதோ விபத்துதான் நடந்துட்டதோன்னு நினைச்சேன். திருடனைப் பிடிச்சுட்டு வரவரைக்கும் என் மனைவி ஃபஸ்ட் எய்டு கூட செய்ய ஒத்துக்கல. என் மனைவி தைரியமானவங்கன்னு தெரியும். இந்தளவு தைரியமா இருந்தது எனக்கே ஆச்சரியம் தான்" என்றார்.

தலையிலும் முகத்திலும் பதினெட்டு தையல்கள் போடப்பட்டு இருப்பதைக் காட்டியபடியே சொன்னார்.

"தெரு மக்கள் திருடனைப் பிடிச்சுட்டு வந்து என் முன்னால நிறுத்தினாங்க. அவன் தலையில நானும் ரெண்டு குட்டு வச்சுதான், போலீஸ்ல ஒப்படைச்சோம்" என்றார்.

கொள்ளையன் பெயர் சுரேஷ். தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்தவன். 'இவன் ஏற்கெனவே வேறு குற்றங்களில் ஈடுபட்டு இருக்கிறானா? உடந்தையானவர்கள் யார்?' எனத் தெரிவித்தது, ஜாம் பஜார் காவல் நிலைய கிரைம் பிராஞ்ச்.

"வீட்டிலிருக்கும் பெண்கள் எப்போதும் விழிப்புடன் இருக்க வேண்டும்" என்பதை எடுத்துக் காட்டும் சம்பவம் மீண்டும் நிகழ்ந்திருக்கிறது.

- யாணன்

'நான் இப்போ எங்கே இருக்கிறேன்?' என்று குழப்பத்துடன் கண்களைக் கசக்கும் கதாநாயகனை திரையில் பார்த்து நீண்ட நாட்களாகிவிட்டன. அந்தக் குறையை செல்வம் படத்தில் தீர்த்து வைத்திருக்கிறார், டைரக்டர் அகத்தியன். கதை? தலையில் அடிபட்டதால் தன் பெயர் உட்பட அனைத்து நினைவுகளையும் மறந்து விடுகிறார் ஹீரோ நந்தா. அவருக்கு வந்திருப்பது தமிழ் சினிமா இயக்குநர்களுக்கு மிகவும் பிடித்த வியாதி - அம்னீஷியா!

பெயரில்லாத நந்தாவுக்கு மருத்துவமனையில் கண்ணன் எனும் புதிய பெயர் வைக்கப்படுகிறது. இவருக்கு சிகிச்சையளிப்பவர் உமா. (அழகிய தமிழ்ப் பெயர் - டாக்டர் தென்றல்). சிகிச்சை நடைபெற்றுக் கொண்டிருக்கும்பொழுதே, இருவரும் (சரி, சரி, நீங்கள் நினைப்பது சரிதான்!) காதலிக்கத் தொடங்குகிறார்கள்.

அடுத்து திருமணம்தான் என்ற நிலையில், நந்தாவின் மூளையில் இதுவரை தூங்கிக்கொண்டிருந்த ஒரு சோம்பேறி நியூரான் சுறுசுறுப்படைந்து விழித்துக் கொள்கிறது. பளிச்சென்று ஒரு மின்னல்! பழைய வாழ்க்கையைப் பற்றி ஒரு குட்டிக் க்ளூ!

சுவாரசியமான புதிய கதை என்பதில் சந்தேகமில்லை. முன் பாதியில் பல காட்சிகள் 'ஜவ்' வகை. அதற்கு ஈடு கொடுக்கும் வகையில், நல்லவேளையாக பிற்பாதியில் பல 'ஜில்' காட்சிகள் அமைந்துவிட்டதால் தப்பினோம். அதிகம் பிரபலமாகாத நடிகர்களை வைத்து, ஒரு புதிய கதைக் களத்தை எடுத்துக் கொண்டதற்காக அகத்தியனைப் பாராட்டலாம். நந்தா, உமா இருவரும் குறை வைக்காமல் நடித்திருக்கிறார்கள்.

நந்தாவைக் கடந்து போகிற சின்னச் சின்ன கதாபாத்திரங்கள் யாருக்காவது அவரைத் தெரிந்திருந்து, நாயகனின் நதிமூலம் தெரிந்து விடாதா என்று பாதிப் படம் வரை தவிக்க வைக்கிறார் இயக்குனர்.

தேவாவின் பாடல்களை நான்குமுறை கேட்டால், இரண்டு பாடல்கள் மனத்தில் நிற்கலாம். யதார்த்தமான வசனமும், துல்லியமான ஒளிப்பதிவும் கதையோடு நம்மை ஒட்ட வைக்கின்றன.

எல்லாம் சரிதான். ஆனால் நினைவு திரும்ப வேண்டும் என்பதற்காக கதாநாயகனுக்கு அளிக்கப்படுவதைப் போன்ற 'சிகிச்சைகளை' எந்த மருத்துவமனையில் நிஜத்தில் அளிக்கிறார்கள்?

**- லஜ்ஜாவதி**



தவயோகினியின்
தரிசனத்தில்...

# தெய்வீக அனுபவம்

**ஆகஸ்டு 28, 2005**
**ஞாயிறு மாலை 4.00 மணி**
**தமுக்கம் மைதானம், மதுரை**



தாதி இருதய மோகினி

தேனிசை தென்றல்
தேவா பங்கேற்கும்
U.K. முரளியின்
இன்னிசை மழை மற்றும்
நடன நிகழ்ச்சிகள்
நடைபெறும்



உலக அமைதிக்காக தியானம்



கலை நிகழ்ச்சிகள்



அஷ்ட லட்சுமிகளின் தத்ரூப காட்சி



"காலத்தின் அழைப்பு" லேசர் காட்சி

# பிரம்மாகுமாரிகள்

**மதுரை : 2640315 2640376**

அனுமதி இலவசம்! அனைவரும் வருக!!

